உ

கடவுள் துணை.



# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி கக.] ரௌத்திரி-ஷு பங்குனி-மீ [பகுதி ரு.
Vol. XIX. March—April—1921. No. 5.

உள்ளுறை.



பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்
பதிப்பு.

வருஷம் ஒன்றுக்கு ரூ. 4.] [தனிப்பிரதி அணா-8.
வெளிநாடுகளுக்கு ரூ. 4—8—0.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி கக.] ரௌத்திரி-ஆடு பங்குனி-மீ [பகுதி ரு.

Vol. XIX. March—April—1921. No. 5.

## தமிழ்ப்பாஷை.



க. தமிழ்ப்பாஷை இமயமலையிலிருந்துவந்தது என்று சிலரும், இமயமலைக்குக் கிழக்கேயிருந்துவந்தது என்று சிலரும், கங்காநதிக் கரையிலிருந்துவந்தது என்று சிலருஞ் சொல்லுகிறார்களே! இப்படியெல்லாஞ் சொல்லுதற்குப் பழந்தமிழ்நூல்களிலே பிரமாணமு முண்டா? அவ்விடங்களிலே தமிழ்ப்பாஷை ஆதியிலே வந்தது எப்படி? தமிழ்நூல்களை அறியாத அந்நியபாஷையாளர் சொல்லும் சான்றுகளும் இங்கே பிரமாணமாகுமா?

உ. தமிழ்ப்பாஷையைத் தாய்ப்பாஷை என்றும், பிறிதொன்று கலவாததனிப்பாஷை என்றும், சொல்லுகிறார்களே! பிரமாணம் யாது? தமிழ்ப்பாஷை தாய்ப்பாஷையாயின்; மற்றைய முறைகள் அமைந்து நின்ற பாஷைகள் யாவை? தனிப்பாஷையாயின், தொல்காப்பியம் முதலிய பழையநூல்களிலே வடசொற்களும் வடநூற் பொருள்களும் கலந்துவருவதென்னையோ?

ங. பாலபாடம் ஒன்றிலே நாவலரவர்கள் தமிழ் என்பதற்குக் கூறிய முடிபை மறுத்து அது வடசொல்லாயிருத்தல் அடாது என்பதுஞ் சொல்லி, அதற்கு "இனியபாஷை" என்று பொருள்கூறுவார்க்குப் பிரமாணம் யாது? தமிழ்நாட்டிலே வழங்கும் பெயர்களுள்ளே வடமொழிப்பெயர்க ளில்லையா? தமிழ் என்பது இனிமை என்பதையன்றி இனியபாஷை என்பதையும் அறிவிக்குமோ? ஆரியம் முதலிய பாடைகளில் இனிமை இல்லையா?

௪. ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய நீதிநூல்களைப் படிப்போர்க்கும், பாரதம் முதலிய இலக்கியங்களைப் படிப்போர்க்கும், படிப்பிப்போர்க்கும் படிப்பைச் சோதனைசெய்து சரி பிழைகள் சொல்வோர்க்கும், பழையநூல்களைப் பரிசோதிப்போர்க்கும், புதியநூல்களைச் செய்வோர்க்கும் நிகண்டு நூலுணர்ச்சியும் இலக்கணநூலுணர்ச்சியும் வேண்டுமா? வேண்டாமா?

௫. தமிழ்நூல்களைப் படித்துக் கருத்துப் பதப்பொருள் முதலியன கண்டற்கும், கற்போர்க்கு ஐயமறப் போதித்தற்கும், புதியனவாக நூலுரைகளைச் செய்தற்கும், புதிய நூலுரைகளை முற்றவாசித்துச் சரி பிழைகள் கண்டு சரியானவைகளைக் கொள்ளுதற்கும், பிழையானவைகளைத் தள்ளுதற்குந் தக்க புலமைபெறுதற்கு எத்தனைவருடம் படிக்கவேண்டும்? படித்தமாத்திரம் போதுமா?

௬. பழையநூல்களைப் பரிசோதித்தல், புதியநூல்களைச்செய்தல் என்னும் இரண்டனுள்ளே அரியசெயல் யாது?

௭. நூலுரைகளை அச்சிடுங்கால் மூலபாடங்களைச் சந்தி பிரித்து அச்சிடவேண்டுமா? பிரியாமல் அச்சிடவேண்டுமா? "அகரமுதலவெழுத்தெல்லாம்" என்னும் மூலபாடத்தை "அகரம், முதல, எழுத்து எல்லாம்" என்று பிரித்துவிட்டாற் பக்கிசைத்துப் படிப்பவர்க்குத் தட்டுளுப்புவாராதோ? முன்னோர் எங்ஙனம் செய்தனர்?

௮. சிறுவர்படிக்கும் வசனபுத்தகங்களிலேவருஞ் சொற்றொடர்களை முற்றாகப் பிரித்துவிடவேண்டுமா? பிரிக்கவேண்டிய சிலவற்றைமாத்திரம் பிரித்துவிடவேண்டுமா? கற்கட்டு, விற்பூட்டு, பொற்பாத்திரம், பஃறொடை, மறைக்காட்டுப்பதிகம் என்பவைகளைக் கல் கட்டு, வில் பூட்டு, பொன் பாத்திரம், பல் தொடை, மறைக்காடு பதிகம் எனப் பிரித்துவிடுங்கால் அது சிறுவர்க்கு இலகுவாய் ,முடியுமா? கடினமாய் முடியுமா? அறிஞர்க்குப் பிழையாய்முடியுமா? சரியாய்முடியுமா?

௯. பாட்டுவடிவாக நூல்செய்தலா? வசனவடிவாக நூல்செய்தலா? அரியது யாது? நூல்செய்தலா? உரைசெய்தலா? அரியது யாது?

௧௦. இலகுவாகும் என்று காலி, கமார், ஆஜர் முதலிய திசைச்சொற்களை எழுதிவிடுதலும் கிருஷி, கஷ்டம், சுகுஷி முதலிய வடசொற்

களை எழுதிவிடுதலும், எழுத்திலக்கணம் படிப்பிக்குமுன் சொல்லிலக்கணம் படிப்பித்தலும் மாணவகர்க்கு இலகுவாய்முடியுமா? கடினமாய் முடியுமா?

கக. வழுவில்லனவாகவும், எளிதில் அறிதற்பாலனவாகவும் நாவலரவர்களாலே மாணவகர்பொருட்டுச் செய்யப்பட்ட புத்தகங்கள் சிலராலே நொதுமலாக விடப்படுதற்கும், பலவகை வழுக்கள் நிறைந்த சில புத்தகங்கள் கொள்ளப்படுதற்கும் காரணம் யாது?

கஉ. மாணவகர்க்கு நியமிக்கப்படும் பாடபுத்தகங்களும், படிப்பிப்போர் தெளிவும், பரீக்ஷைவினுக்களும், செப்புநோக்கமும் வழுவுறுமாயின், மாணவகர்பயன் யாதாய்முடியும்!

கங. காணப்படும் வழுக்களை உலகறிய வெளிப்படுத்தல் நல்லதா? மறைத்துவைத்தல் நல்லதா? வழுக்கள் சொல்வோரை உவத்தல்வேண்டுமா? வெறுத்தல்வேண்டுமோ? பெரும்பாலும் வழுவில்லது என்றன்றி ஒன்றும் வழுவில்லது என்று கொள்ளப்படுவதும் உண்டா?

கச. ழகார ளகாரங்களும், நகார னகாரங்களும் சொற்களிலே மாறுபடாமல் வழங்குதற்கு யாது செய்தல்வேண்டும்?

கரு. தமிழ்ப்பாஷையிலே செய்யப்பட்ட நூல்கள் தக்க தமிழுணர்ச்சியுந் தமிழபிமானமுமில்லார்க்குக் காட்டி அங்கீகரிக்கப்படுதலும், பாயிரம் சொல்லப்படுதலும், சரி பிழை தெரிந்துந் தெரியாதும் கொள்ளப்படுதலும் அறிஞர்க்கு யாதாய்முடியும்?

கசு. உபாத்திமார், ஆணுவாத்தி, பெண்ணுவாத்தி, உபாத்தியாயனி, உபாத்தியாயினி, ஆசிரியகாசிநாதர், ஆண்கல்வி, பெண்கல்வி, சாக்ஷி, மாக்ஷி, ஐயா அவர்கள், உமாபதிசிவாசாரியார் அவர்கள், பண்டிற் அவர்கள், சுவாமிநாதன் அவர்கள், நாவலர்பெருமான், திரிகராட்டிரன், ஸ்ரீராமர், ரெத்தினம், பொதிகைமலை, வாழைமீன், திமிங்கிலம் பெரிது, "சாமானிய அல்லதுமந்த" அநான்று, "தமிழ் படித்தவர் பாடபுத்தகம் எழுதமாட்டார்" நதியோடிக்கொண்டிருக்கையில், சுகாத்தியம், யௌவனதிசை, முற்றிக்கை, பங்கிகரணம், பனைமரம் என்பன வழுவில்லனவாகுமோ? வேறுகுமோ?

௧௭. விளக்கினர், விளக்கியுள்ளார், எழுதினர், எழுதியுள்ளார், பாடினர், பாடியுள்ளார், உரை எழுதப்பட்டது, உரை எழுதப்பெற்றது, கருத்துக் கூறப்பட்டது, கருத்துக் கூறப்பெற்றது என்னும் வினைமுற்றுக்களுள்ளே பொருந்தாதனவும் மங்கலத்துக்கு மாறுவனவும் உளவா? இலவா?

௧௮. உபநியாசம், வியாசம், அன்றேல், ஆகவே, இறவுக்கை, குறிப்பு, ஆசிரியர், கோரிக்கை, பவனம், அற்சிரம், கணையாளி, சிவபிராணி, பாஷைப்படுத்தல், உருண்டை, துலாக்கோல், கண்டிசின், ஆஷாடபூதி என்னும் சொற்களுக்குப் பொருள்கள் யாவை? பரியாயமாகக் கொள்ளத்தகும் சொற்கள் யாவை? இவற்றுள்ளே சான்றோர் நூல்களில்வருஞ் சொற்களு முளவா? உளவாயின், அவை யாவை? எப்பொருள்களிற் கொள்ளப்பட்டன?

௧௯. தமிழிலே இடும் கைச்சாத்தின்முன்னே இடப்படும் முதலெழுத்துத் தமிழிலே இடப்படுதல் நல்லதா? வேறுபாஷையில் இடப்படுதல் நல்லதா?

௨௦. இன்னசொல்லுக்கு இன்னது பொருள் என்னும் சங்கேதம் சேர்க்காது கதாநுகதிகநியாயமாகச் சொற்களை வழங்குதலும், இலக்கியலக்கணங்களிலே முன்னோர்கொண்ட முறைகளை வேறுமுறைகொள்ளும்வாயிலாலே மறுத்தலும், தமிழபிமானிகளும், அறிஞரும் பிழைகளைத் திருத்தாதுவிடுதலும், தமிழ்ப்பாஷைக்கு யாதாகும்? தமிழ்ப்பாஷை இலக்கணவரம்புடையது என்பது பெரியோர்வாக்கு.

இங்ஙனம்,

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

# ஒரு செய்யுளுரை.

இத்தமிழ்நாட்டிற் பண்டைக்காலத்துப் புலவர்களாற் பாடப்பெற்ற பாடல்கள், சிறுநூல்களாகவும் பெருநூல்களாகவும் பல அமைந்துள்ளன. அவற்றிற்குச் சில ஆன்றோர்களியற்றிய உரைகளும் அமைந்துள்ளன. அவ்வுரைகள், நூலாசிரியர்கருத்தைச் செவ்வனே விளக்குகின்றன.

ஆன்றோர்களா லுரையியற்றப் பெறாதனவாகிய சில அருமையான நூல்களுக்கு இக்காலத்துப்புலவர்கள் பலர், உரையியற்றியுவகையெய்துமாறு தமிழ்மக்களுக் குதவுகின்றனர். இவர்கட்கு எஞ்ஞான்றுந் தமிழுலகம் நன்றிபாராட்டுங் கடப்பாடுடைத்து. அவ்வுரைகளிலே சில, ஆசிரியர்கருத்தையும், உண்மையையும், விளக்குவனவாயும், சில உரைகள் உண்மையை இன்னதென்றறிதற் கேலாதனவாயும் உள்ளன.

அவ்வாறு உண்மைகாணற் கியலாதனவாயிருக்குஞ் செய்யுட்களிலும், உரைகளிலும் ஒன்றாக, ஔவையாரருளிய நல்வழியின் இறுதியிலுள்ள,

"தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்"

என்னுஞ் செய்யுளும், இதன் உரையும் உள்ளன.

மேற்கண்ட செய்யுளுக்கு இக்காலத்தாருரை வருமாறு:—

திருவள்ளுவநாயனாருடைய திருக்குறளும், சிறப்பமைந்த நால் வேதமுடிவாகிய உபநிடதங்களும், ஞானசம்பந்தர் நாவுக்கரசர் சுந்தரர் என்னும் மூவரருளிய தேவாரங்களும், வியாசமுனிவரருளிய வேதாந்த சூத்திரமும், திருவாதவூரரருளிய திருக்கோவை திருவாசகங்களும், திருமூலநாயனாருளிய திருமந்திரமும் ஆகிய இந்நூல்களனைத்தும் ஒரு பொருளே நுதலிவருவன; என்பதே இக்காலத்தாருரையாகும்.

இவ்வுரையின்கண் சில ஐயங்கள் நிகழ்தற் கிடனுண்டு. அவை, செந்தமிழ்ச் செழுநூல்களிற் சிறப்பமைந்தனவாயுள்ளன இத்துணை தானா? இச்செய்யுளுரையிற் கூறப்படும் நூல்களினும் பெருமையாகப்

பெணப்படும் நூல் உள்ளதே; அதனைக் கூறாதகாரண மென்னை? தண்டமிழ் பயிலும் மாணவர்கள் தெய்வ அன்பையும் நீதியையும் அறிந்துகோடற்பொருட்டு என்புருக்குஞ் செஞ்சொற்பாடற் சமயநூல்களையும், பசுமரத்தாணிபோற் பதியுஞ் செவ்விய நீதிகளைப் புகட்டற்கேற்ற நூல்களையும் கூறுதற் கெடுத்துக்கொண்ட இச்செய்யுளில், செந்தமிழிளைஞர்கள், அறிதற்கரிதாயுள்ளனவாய உபநிடதங்களையும் வேதாந்தசூத்திரத்தையுங் கூறியகாரண மென்னை? என்பனவாம்.

இவ்வையங்களைத் தெளிந்துகோடற்கெண்ணி ஆராய்ந்ததில் இவ்வையம் நிகழற் கிடனின்றியே செய்யு ளமைந்திருக்கிறதென்று தோற்றுகின்றது. அது வருமாறு:-

தேவர்குறளும் — வள்ளுவநாயனார் வழங்கிய திருக்குறளும், திருநான்மறைமுடிவும்—சிறப்பமைந்த நான்மறைமுடிவாகிய பெருமைசான்ற நாலாயிரப்பிரபந்தமும், மூவர்தமிழும்—சம்பந்தர் நாவுக்கரசர் சுந்தரர் ஆகிய வருட்பெரியோரளித்த தேவாரமும், முனிமொழியுங் கோவை திருவாசகமும்—வாதவூர் முனிவர் அருளிய திருக்கோவை திருவாசக மென்னும் நூல்களும், திருமூலர்சொல்லும்—திருமூலநாயனாரருளிய திருமந்திரமும் ஒருவாசகமென்று உணர்—ஆகிய இவை யாவும் ஒருபொருளுதலிய தண்டமிழ்நூல்களென் றறிக.

திருநான்மறைமுடிவென்றதற்கு நாலாயிரப்பிரபந்த மென்றும், முனி என்றதற்கு, வாதவூர்முனிவரென்றும் பொருள்கூறிய காரணம் வருமாறு.

சைவசமயத் தமிழர்களுக்கு வேதமாகிய தேவார திருவாசகங்களைக் கூறியவர் வைணவசமயத்தமிழர்களுக்கு வேதமாகிய நாலாயிரப்பிரபந்தத்தையுங் கூறவேண்டுமாகலானும், தாமரைக்கண்ணான் றாட்டுணைமறவாத் தொண்டர் குழாங்களிற் றூயசீர்சான்ற ஆழ்வார்களாற் பாடப்பெற்ற அரும்பெருந் திருமறையாகலானும், நான்மறைகளின்முடிவான மெய்ப்பொருளையே முழக்கும் முதுமொழியாகலானும், இறைவன் திருவுளப்போக்கால் வடமொழி வேதத்திற்கு முன்னின்று முழங்கிச்செல்லும் பெருமையுடைமையானும், இன்றும் தென்கலைவைணவர்கட்குரிய ஞானவேதமாகக் காணப்படுதலானும், திருநான்மறைமுடிவென்பது நாலாயிரப்பிரபந்தமே யென்க.

இச்செய்யுளியற்றிய ஔவைப் பிராட்டி சைவசமயத்தைச் சார்ந்தவராகலின், நாலாயிரப்பிரபந்தத்தைக் கூறுர், உபநிடதங்களையே கூறினர்; எனின், இச்செய்யுளின் முதற்கண்கூறிய திருக்குறள் எச் சமயத்தோர்க்கும் ஏற்புடைத்தான இன்றமிழ்ப் பெருமறையாகலானும், உபநிடதங்களும் அறுவகைச்சமயத்தார்க்கும் ஒப்பமுடிந்தனவாகலானும், இச்செய்யுள் சைவவைணவர்களாகிய இருமதத்தினர்க்கும் ஒப்பக் கூறியதாகலானும், பண்டைக்காலத்தே சமயப்பொருமை மிகுதியாக இன்றென்பது தெளிவாகலானும், இது சமயச்சார்பாகக்கூறியதன் றென்க.

முனியென்பது வாதவூரடிகளுக்கே பொருந்துமாதலானும், நிலையிலாப்பொருளனைத்தையும் நில்லாவெனவுணர்ந்து நீத்த பெருந்தகையாராதலானும்,

'கற்றவாதவூர் முனிவரையழைத்து, என்றும்'
'மரித்தமனமும்புளகமுமாய்நின்றார்வாதவூர்முனிவர்' என்றும்,
'இனியமாமுனிவர்' என்றும்,
'செல்வமாமுனி' என்றும்,
'பாடன்மாமுனிவர்' என்றும்,
'பின்னியல்முனிவர்' என்றும்,
'நன்முனியடிவிடென்று நாயகனருளிச்செய்தான்' என்றும்,
'அறந்தருமுனிவன்' என்றும்,

பண்டைப்பனுவல்களில்வழங்கும் பெருவழக்குண்மையானும், முனியென்பது வாதவூர்முனிவரையே யென்க.

இவ்வுரையை முத்தமிழ்த்துறையின்முறைபோகிய உத்தமப்புலவர் ஆய்ந்து உண்மையைவெளியிடுமாறு வேண்டுகின்றேன். எனது சிற்றறிவுக்கெட்டியமட்டும் வரைந்த இவ்வுரையிற் காணுங் குற்றங்கட்காக என்னை அறிவுடையார் கடைக்கணிப்பாராக.

இங்ஙனம்,

மாணவன். சா. சிதம்பரன்,

கரந்தைத்தமிழ்ச்சங்கம்.

---

# அணிற்பிள்ளையின் அருமைத்தொண்டு

—:o:—

"அணிலெனும்பிராணி யயோத்திராமனுக்
குதவிசெய்ததா யுலகெலாங்கூறும்."

அணிலெனும் பிராணியின் சிறுமை யென்ன? அயோத்தி ராமபிரானின் பெருமை யென்ன? இவருக்கு இவ்வற்பப்பிராணி யென்னவுதவியை யெவ்வாறு எப்பொழுது செய்தது? என்று விசாரிக்குங்காலத்தில் ஸ்ரீராமபிரான் திருவணைகட்டியகாலத்தில் இது தன்னாற்கூடியவுதவியைச் செய்யவேண்டுமென்றுட்கொண்டு சமுத்திரத்தில் மூழ்கிவந்து சமுத்திரக்கரை மணலிற்புரண்டு உடலில் ஒட்டிய மணலைத் திருவணையிற்சேர்த்தது. இவ்வாறு திருவணை நிறைவேறுகிறவரையிற் செய்தது. கருணைக்கடலாகிய ஸ்ரீராமமூர்த்தி அன்புமேலீட்டாற்செய்யும் அணிலின் திருத்தொண்டிற்குத் திருவுள்ளமகிழ்ந்து அதன்முதுகிற் றடவிக் கொடுத்த திருக்கைவிரலடையாளமே அதன்முதுகில்தோன்றும் அடையாளமென்பர்.

இவ்விஷயம், கம்பராமாயணம் சேதுபந்தனப்படலத்திற் காணப்படவில்லை. வான்மீகத்திலும் இல்லையென்றே வடமொழிவாணர்கள் கூறுகிறார்கள். பின் இச்செய்திவழங்கக் காரணம் என்னவென்றுபார்க்குங்கால், தொண்டரடிப்பொடியாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய வேதாந்தசாரமாகிய திருமாலை (உஎ) இருபத்தேழாம்பாசுரத்தில் இது நன்கு விளக்கப்பட்டிருக்கக் கண்டோம். அப்பாசுரம் இது.

குரங்குகண்மலையைத்தூக்கக் குளித்துத்தாம்புரண்டிட்டோடித்
தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாவணிலும்போலேன்
மரங்கள்போல்வலியநெஞ்சம் வஞ்சனேனெஞ்சுதன்னால்
அரங்கனார்க்காட்செய்யாதே யணியற்றேனயர்க்கின்றேனே.

இதுபோன்ற அரியவிஷயங்கள் பிரபந்தத்திற் காணப்படுகின்றன. சமயம்நேருங்காலங்களிற் காண்பதை வெளியிடுவோம்.

ஜி. சதாசிவம்பிள்ளை,
நாகை நீலலோசனிப்பத்திராதிபர்.

———

உ

# அகலிகை வெண்பா

## இரண்டாம் பதிப்பின் அநுபந்தம்.



### முன்னுரை.

1. அகலிகைவெண்பா இரண்டாம்பதிப்பு அச்சிடப்பெற்றபின்பு, காலஞ்சென்ற பிரமஸ்ரீ சிவபுராணப்பிரசங்க சிரேட்டர் சுந்தரேசுவர ஐயரவர்களுடன் இந் நூலைப்பற்றி நான் பேசிக்கொண்டிருந்தபோது "கௌதமன் இந்திரன் இருவரும் நீரில் முழுக, எவன் பின்னெழுவானோ அவனுக்கே அகலிகை உரியவள்" என்று பிரமதேவர் கூற, இருவரும் முழுகக் கௌதமர் பின்னெழுந்து அகலிகையை அடைந்தாரென்னும் கதையேயன்றி, அந்தப் பிரமதேவரே "எவன் முன்னும் பின்னும் முகமுடைய பசுவை முன்பாகக் கண்டு மூன்றுமுறை வலஞ்செய்துவருவானோ, அவனே அகலிகைக்கு நாயகனுவான்" என்றுகூற, இந்திரன் மேகவாகனமேறி உலகெல்லாந் தேடாநிற்பப், பிரமசாரியாயிருந்த கௌதமரைக் கிருகஸ்தராக்க நெடுங்காலம் கருதியிருந்த நாரதர் சந்தித்து, அத்தகைய ஒரு பசுவினிடம் கொண்டுபோய்விட்டு, அதனை வலம்வரச்செய்து, அகலிகையை அடையச்செய்தாரென்னும் வேறொரு கதையுமுண்டென்று அவர்கள் கூறினார்கள்.

2. இவ் விரண்டுகதைகளுள் முதலாவது, அகலிகைவெண்பா இரண்டாம்பதிப்பில் "ஆரமுதோ" என்னும் 10-ம் பாட்டிற் கூறப்பட்டுள்ளது. அதனோடு இரண்டாவதனை முரணுமற் சேர்த்தற்கு இன்றியமையாத அளவு அந்தப் பாட்டின் இறுதியடியை மாற்றிக்கொண்டு பாடிய புதுப்பாட்டுக்களே இந்த அநுபந்தத்தில் அடங்கியிருக்கின்றன.

3. அந்தப் புதப்பாட்டுக்களை அகலிகைவெண்பா மூன்றும்பதிப்பு வெளிவருவதாயிருந்தால், அப்போது அதனோடு சேர்த்துப் பதிப்பிக்க லாமென் றிருந்தேன். அவைகளைப் பார்வையிட்ட எனது நண்பர், திருநெல்வேலி ஹிந்துகாலேஜ் தலைமைத்தமிழ்ப்பண்டிதர், மகா-௱-௱-ஸ்ரீ மே. சொ. சுப்பிரமணிய கவிராயரவர்கள் இப்பொழுதே வெளியிடல் நலமென்று கூறியதற்கிணங்கி, இந்த அநுபந்தத்தை வெளியிடலானேன்.

4. இவ் வநுபந்தத்தில் வரும் பாட்டுக்களுக்குக் குறிப்புரை அதனதனடியிற் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது.

5. ஷை பாட்டுக்களின் கருத்து விளக்கும்படி எழுதிய வசனம், பாட்டுக்களடங்கிய பகுதிக்குப்பின், இடையீடின்றி ஒருசேர வாசிக்கும்படி, ஒரு தொகுதியாகப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது. அவ்வப் பாட்டுக்குரிய வசனப் பகுதியின் தொடக்கத்தில் பாட்டுக்களின் எண்கள் ஓர் ஓரத்திற் பதிப்பிக்கப்பட்டிருத்தலால், ஒவ்வொருபாட்டுக்குரிய உரையையும் பகுத்துத் தெரிந்துகொள்ளலாம்.

6. அகலிகைவெண்பா இரண்டாம்பதிப்பில் உள்ள 10-ம் பாட்டையும் அதற்குரிய வசனபாகத்தையும் நீக்கிவிட்டு, அவற்றிற்கு மாறாக முறையே இவ் வநுபந்தப் பாட்டுப்பகுதி வசனப்பகுதிகளை வாசித்தல் வேண்டும்.

7. இவ் வநுபந்தக் கையெழுத்துப்பிரதியைப் பார்வையிட்டுத் திருத்தங்கள் குறிப்பித் துதவிய பல வித்துவநண்பர்களுக்கும் எனது மனமார்ந்த வந்தனங்க ளுரியன.

8. ஷை பாட்டுப்பகுதி வசனப்பகுதிகளில் உள்ள "குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்" செய்யும்படி கற்றோரை வேண்டிக் கொள்கின்றேன்.

24-8-1921.
திருநெல்வேலி.

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.

---

# அகலிகைவெண்பா

## இரண்டாம் பதிப்பின் அநுபந்தம்.



### அகலிகையைக் கௌதமர் அடைந்தவரலாற்றை இந்திரன் நினைவுகூர்தல்.

[6-ம் பாட்டுமுதல் (இவ் வநுபந்த முழுதும் உள்பட) 43-ம் பாட்டில் 'உய்வதரிது' என்பதுவரையும் உள்ளவை யாவும், சபையிலிருக்கும் போது இந்திரனுக்கு அகலிகையின் ஞாபகம் வரக் காமபரவசனாகி அவள் விஷயமாக முன் நிகழ்ந்தவற்றை அவன் தானே நினைந்தவையே யன்றி யாருக்கும் தெரிவித்தனவல்ல வென்பதை வாசிப்போர் கவனித்தல் வேண்டும். இவ்வாறே 45முதல் 68-ம் பாட்டுவரை யுள்ளவையும் அவன் நினைந்தவையே.]

### அகலிகையை அடைதற்குப் பிரமதேவர் நியமித்த முதற் சபதம்.

ஆரமுதொ டன்னாள்தோன் றந்நாளே யான்காதல்
கூர,மயல் கோதமனுங் கொள்ள,அயன்,—நீர்முழுகி
முன்னெழுந்தார் தோற்பர்என, மூழ்கினேம்; மூழ்க, அவன்
பின்னெழுந்தான்: தோற்றேன். பிறகு,

அன்னாள்—அப்படிப்பட்டவள்—அகலிகை. கோதமன்—கௌதமன். அயன் - பிரமன். 10.

### இரண்டாஞ் சபதம் நியமிக்கும்படி பிரமதேவரை இந்திரன் வேண்டடல்.

வேத,இவன் கும்பகமா வித்தை மிகப்பயின்ற
சாதனையின் நீருள்நனி தங்கினான்:—நீதி
தவறா தெமக்குச் சமமாம் ஒருசூள்
நுவல்வாய் பிறிதென்றேன் நொந்து.

வேத—பிரமனே. கும்பகம் மா வித்தை—மூச்சடக்குதலாகிய பெரிய வித்தை. பயின்ற சாதனையின்-பழகிய பழக்கத்தால். நனி - (என்னினும்)

மிக (நெடுநேரமாக). பிறிது ஒருசூள் நவல்வாய்=வேறொரு சபதம் கூறுவாயாக. 10-1.

சிசி! இனியமொழி செப்புதலும் சீர்மைத்தோ!
ஆசை மதியை அழித்ததோ!—நீசர்
புகலுமொழி சொற்றாய்! புரந்தர,போ! போபோ!
அகலழி! என்றான் அயன்.

சீர்மைத்தோ - சிறப்புடையதோ. சொற்றாய் - சொன்னாய். புரந்தரன் - இந்திரன். அயன் - பிரமன். 10-2.

என்னலுமே, கோதமனும், ஈசன் திருவருளால்,
இன்னமும்யான் வெல்வேன்: இவன்நொந்து—சொன்னபடி
வேறுசூள் கூறுவாய் வேத, எனப்,பிரமன்
கூறினான் வேறு குறித்து.

என்னலுமே - என்று சொன்னவுடனே. 10-3.

எதிரியே சூள்வே றியம்பென் றதனால்
புதுமையா ஓர்சூள் புகல்வேன்:—இதுவே
இறுதி: பிறிதொன் றினிமேல் இசையேன்:
உறுதி: இது நன் குணர்.

புதுமையா - (1) புதியதாக; (2) ஆச்சரியமானதாக. 10-4.

## இரண்டாம் சபதம்.

முன்போலப் பின்னும் முகமுடைய ஓர்பசுவை
முன்பாகக் கண்டதனை மூன்றுமுறை—அன்பா
வலம்வருதல் செய்ய வலவன்எவன்? அன்னான்
வலவன்எழில் கூர்இம் மகட்கு.

வ(ல்)லவன் – (1) வல்லமையுடையவன்; (2) கணவன். எழில்-அழகு. கூர் – மிகுந்த. மகட்கு – பெண்ணுக்கு. 10-5.

## இரண்டாம் சபதத்தைப் பற்றி இந்திரன் எண்ணுதல்.

என்ன அயன் கூற, எனக்கே இதுநன்றென்
றுன்னி,இவன் காலால் உழந்துதிரிந்—தன்னபசுக்
காண்பனலன்; கார்மேற் கடிதெவனும் போய்க்கண்டு
மாண்பொடிவண் மீள்வல் மகிழ்ந்து.

இது - இந்தச்சபதம். உழந்து - பிரயாசப்பட்டு - வருந்தி. காண்பன லன் — காணமாட்டான். எவணும் — எங்கும். இவண் — இங்கே. மீள் வல் - திரும்புவேன். 10-6.

அணிலேற விட்டநா யாகஇவன் ஏங்க,
மணிலேஇம் மாதை மணந்து,—விணுளோர்
குடிமைஇவள் கொண்டரசு கொள்ள, அடிமைக்
கடிமையென வாழ்வேன் அமர்ந்து.

"அணில் ஏறவிட்ட நாய்போல" என்பது ஒரு பழமொழி. தான் பிடிக்கமுயன்ற அணிற்பிள்ளையைத் தான் ஏறக்கூடாத மரத்தின்மேல் ஏறவிட்டு ஏங்குகின்ற நாய்போல என்பது கருத்து. குடிமை(யை)— குடியாந் தன்மையை-குடிகளாவதை. அமர்ந்து-திருப்திப்பட்டு அமர்ந்து. அமரர்க் கரசனுக வாழ்தலினும் அகலிகைக் கடிமையாக வாழ்தல் அதிக இன்பந்தருவதாக, இந்திரன் கருதினன். 10-7.

உரைமகளைக் கொண்ட உலகீன்ற தேவும்
மரைமகளைக் கொண்டநெடு மாலும்—வரைமகளைக்
கொண்ட அரனும்இவட் கொண்டஎனை நேரார்;வே
றண்டர் தமில்நேர்வார் ஆர்?

உரை — சொல். உரைமகள் — சரசுவதி. மரை — தாமரை. மரை மகள் - இலக்குமி. வரை - மலை. வரைமகள் - பார்வதி. இவட் கொண்ட- இவளைக் கல்யாணஞ்செய்துகொண்ட. நிச்சயம் பற்றி எதிர்காலம் இறந்த காலமாகக் கூறப்பட்டது. 10-8.

அனையமினர், தங்கொழுநர் ஆகத்தோர் பாகம்
மனும்இடம்எய் பேதையர்;இம் மாதோ,—தனதுரியோன்
உள்ளம் முழுதும் உறையுளாக் கொள்ளைகொளும்
கள்ளம் மிகுசமர்த்தி காண்.

தனது உரியோன் — தன் கணவன். உறையுள்—இருக்குமிடம். ஆகத் தோர்பாகமென்றது தத்தம் கணவர்தேகத்தில் சரசுவதி நாவையும், இலக்குமி மார்பையும், பார்வதி இடப்பாகத்தையும் உறைவிடமாகக் கொண்டதை. 10-9.

இவர்காதற் கேள்வன் இதயத்தே வாழ்வை
இவள்போலப் பெற்றிலே மென்றே—அவருள்
ஒருத்தி வெளுத்தாள் ஒருத்தி சிவந்தாள்
ஒருத்தி பசந்தாள் உடம்பு.

இவர்தல்—ஏறுதல்—மிகுதல். பசந்தாள்—பச்சைநிறம் அடைந்தாள். தன் கணவன் இருதயத்தில் இவள் வாழ்தல்போல, நம் கணவன் இருதயத்தில் நாம் வாழப்பெற்றேமில்லையென்று கருதியோ, என்பது முதலிரண்டடியின் கருத்து. 10-10.

அவரெலாம், அவ்வவர்தம் அன்பருடலைத்
தவிருறா தெக்காலும் சார்ந்து—தவருக்(கு)
உடலொடுட லானார்: உயிரொடுயி ரானாள்
இடுகுமிடை இம்மா தெனக்கு.

அன்பர் - கணவர். தவிருறாது - நீங்காமல். தவருக்கு - (தங்கள் தங்கள்) கணவருக்கு. இடுகுதல் - சுருங்குதல். 10-11.

கண்ணின்மிகு கண்ணாய்க் கருத்தின் மிகுகருத்தாய்
ஒன்னுயிரின் மிக்க உயிராயிப்—பெண்ணினொடு
வாழ்கின்ற வாழ்க்கையே வாழ்க்கை: பிறவாழ்க்கை
தாழ்வன்றி வேறின்று தான்.

ஒன் உயிர் - (உடலோடு) பொருந்திய உயிர். 10-12.

## இந்திரன் இரண்டாம்சபதத்தை நிறைவேற்றமுயன்று தவறி வருந்தல்.

என்று பலபலவும் எண்ணிக் கருமுகில்மேற்
சென்று திசைமுழுதும் தேடினேன்—துன்றும்
இருண்முகில் மின்னி இரிக்க, இரவும்
துருவிமிக நொந்தேன் துயர்ந்து.

துருவி - தேடி. துயர்ந்து - துன்புற்று. "துயமென் கூந்தற் செவ்வாய்த் துடியிடை துயர வன்றே" நைடதம். 10-13.

பூதலத்துங் கண்டிலன்,யான் போற்றும் புலவர்உறை
மீதலத்துங் கண்டிலேன், மேதினிக்கீழ்ப்—பாதலத்துங்

கண்டிலன் அவ் ஆவதனைக் காணுமே உள்ளத்துக்
கொண்டதுயர் சாலக் கொடிது.

யான் போற்றும் - என்னுல் காக்கப்பெற்ற. ஆ—பசு. 10-14.

இரவுபகல் யான்பலநாள் எவ்வயினுந் தேடிக்
கருவிமுகில் மேலலைந்துங் காணு—ஒருபசுவைக்
கோதமன்ஓர் காற்கண்டான் கொல்லோ வெனமரண
வேதனையை உற்றேன் வியர்த்து.

வயின் - இடம். கருவி - காரணம். கருவிமுகில்—(உலகம் வாழ்தற்குக்) காரணமான (மழையைப் பெய்யும்) மேகம். வியர்த்து - வேர்த்து. 10-15.

நாரதர் உதவியால் கௌதமர் இரண்டாம்சபதத்தை நிறைவேற்றல்.

இவ்வா றுளைந்தலைந்தேன் யான். அப் பசுக்காண,
எவ்வா றெனினும், இறைவன் அருள்—செய்வான்,
பெருந்தவந்தான் செய்வெனென்று, பிஞ்ஞகனைச் சிந்தை
புரிந்திருந்தான் கோதமன் அப் போது,

உளைந்து - மனவருத்தமுற்று. செய்வான்-செய்யும்படி. பிஞ்ஞகன்-சிவன். சிந்தைபுரிதல் - தியானித்தல். 10-16.

சோதிஒன்று வானில்நெடுந் தூரத்தே தோன்ற, அவன்
யாதிதென்று சிந்தித் திடுமுனம், அச் - சோதி
நெருங்க, மிளிர் செம்மேனி நீள்சடைகண் டீசன்
இருங்கருணை செய்துவந்தா னென்று

யாது இது என்று. இருங் கருணை - பேரருள். 10-17.

பாதன்மேல் வீழ்ந்து பகவ! எனத்தொழுதான்
நாரதனுங் கன்னவனை நாரதனல்—வாரி
எடுத்திருகை கொண்டுதழீஇ என்நேய, இங்கண்.
அடுத்ததனை யான்அறிவ னல்.

ஆங்கு—(தொழுத) அவ்விடத்தில். நார்—அன்பு. நாரதனல்—அன்பினல் - அன்போடு. இங்கண் - இங்கே. அடுத்தது - சம்பவித்தது - நிகழ்ந்தது.

மிருந்த தூரத்திலே கேவலம் பகுத்தறியக்கூடாத சோதிமயமாக வும், குறைந்த தூரத்திலே சிவந்த உடலும் சடையும் புலப்படத் தான் தியானித்துக்கொண்டிருந்த சிவனேயாகவும், (சிவனென்றெண்ணிக்கீழே விழுந்து தொழுது கிடந்த தான் தூக்கி நிறுத்தப்பட்டபோது) சமீபத் திலே தன் சிநேகிதனாகவும் கௌதமர் கண்டது நாரதர் உருவை.10-18.

ஒருவன் தனதுள்ளத் துள்ளுவது, சேய்த்தின்
மருவும் பிறன்தன் மனத்தே—தெரிதல்,
இனியதோர் அற்புதமே யென்னினுமெய் யன்றோ?
அனையதாம் தூர உணர் வால்,

சேய்த்தின் - தூரத்தில். பிறன் - மற்றொருவன். தூர உணர்வு - தூரத் தில் உணர்தல். இதனை ஆங்கிலசாஸ்திரிகள் ‘டெலிபதி’ என்பர். இவ்வாறு “உணர்ச்சியொத்தல் பிசிராந்தையார்க்கும் கோப்பெருஞ்சோ ழற்கு முன்மை புறப்பாட்டிற் கண்டது” என்பது ஸேது ஸமஸ்தான வித்வான் ஸ்ரீ இராகவையங்காரவர்கள் தெரிவித்தது. 10-19.

மனக்கவலை நீடற்ற வாறென்உளம் ஓர,
நினக்கவலம் நீக்கும் நிமித்தம்—உனைத்துனினேன்:
துன்பம் அரையாம் துணைவரது கூட்டத்தால்
இன்பம் இரட்டியா மே.

அவலம் - மனக்கவலை. “நெஞ்சத் தவல மிலர்” குறள் 1072. பின் இரண்டடியும் ஓர் ஆங்கிலப் பழமொழியின்கருத்தைத் தழுவியது.10-20.

உனைப்பிரம சாரியென ஓதல் ஒழிய,
மனைக்கண் உனை மாதொடியான் வைக்க,—நினைத்த
நெடுநாள் நினைவு நிறைவேறு காலம்
கடிதே புகுந்துளது காண்.

கடிதேபுகுந்துளது — (எதிர்பார்த்ததினும்) விரைவாக வந்திருக்கின் றது. 10-21.

அயல்வைப் தொழுவில்ஓர் ஆயிரஆ உண்டால்,
வயவார் பருவ நிதால், வாளா—முயலாதே,
முன்னொடு பின்னும் முகமுடைய ஓர்பசுவை
என்னொடு கள்வா என,

வயவு ஆர் பருவம் இதால் - இது (அப்பசுக்கள்) கருப்பம்நிறைந்திருக்கும் காலமாதலால். வாளா முயலாதே — (அப்பசுவைக்காணத்தக்க இடமாகிய அந்தத் தொழுவைவிட்டு வேறு இடங்களில்)வீணே (தேடும்) முயற்சி செய்யாமல். 10-22.

இப்பாரில் ஓர்கன் றிரண்டுமுகம் முன்புறம்வாய்
உற்பாதம் யான்கண் டுளனெனினும்—எப்பாலும்
உற்றபசு முன்பின்முகம் உள்ளதனைக் கண்டிலேன்,
நற்றபசு செய்நா ரதா,

உற்பாதம் - (இயற்கைக்கு மாறான) பிறவி. எப்பாலும் உற்ற பசு-எங்கும் உள்ள பசுக்களுள்ளே. நற் றபசு - நல்(ல)தபசு. 10-23.

என்ன,அவன் வாய்பேசா திட்டன் கரம்பற்றிச்
சொன்னதொழு உய்த்தத் தொழுவினுறும்—நன்னிரையுட்
சூலுளையும் ஓர்பசுவைச் சுட்டி, முகம்அதன்பின்
பாலும்உள தாங்குற்றுப் பார்

எ(ன்)னலும் - என்று சொன்னவுடனே. சொன்ன - முன் சொல்லப்பட்ட. நல்(ல)நிரை (-பசுக்கூட்டம்). சூல் உளைதல் - பிரசவவேதனைப் படுதல். 10-24.

என்ன, அவன்,என்னை எள்ளுதியோ நீஎன்று
பன்னு முனம்அப் பசுவினது—பின்னோர்
முகந்தோன்ற மூன்று முறைவலம்வந் துள்ளம்
உகந்தான்தன் தோழனைநோக் குற்று,

எள்ளுதியோ - பரிகாசம்பண்ணுகின்றாயோ. பின் ஓர்முகம் - பிற்புறத்தில் ஒரு முகம் (-பிறந்துகொண்டிருக்கும் கன்றின்முகம்.) 10-25.

நாரதருக்குக் கௌதமர் நன்றியறிவு கூறல்.

அவலமெலாம் நீக்கும் அரனடியைச் சிந்தித்(து)
அவனருளால் வேட்ட தடைந்தேன்—அவனடிகள்
வாழி! அவனேபோல் வந்தென்னை வாழ்வித்தாய்
வாழி! பலநலமும் வாய்ந்து.

அவலம் - மனக்கவலை, வேட்டது - விரும்பியது. 10-26.

உடுக்கை இழந்தவன்கை போப்ப உடனே
இடுக்கண் களைந்தாய்; எனக்குக்—கிடைக்கரிய
தெளிவையோ ஈந்தாய்; சிறியனேன் ஆவிக்கோர்
ஆவியையே ஈந்தாய்: அறி.

உடுக்கை - உடை. இடுக்கண் - துன்பம். 10-27.

விண்ணிடையான், செந்தொளிரும் மேனி சடைகண்டு,
கண்ணுதலே யென்று கழல்பணியப்—பண்ணும்
உருவாலும் உன்னியதை உன்னியவா றீந்த
அருளாலும் ஈசனொத்தா யால்.

செந்து ஒளிரும் - சிவந்து பிரகாசிக்கும். 10-28.

மின்னை அளித்தாய்க்கு வேறொருகைம் மாறுமிலேன்
என்னை யளித்தேன். இறைவன்நேர்—உன்னினால்,
உன்னையலால் இல்லை: உன்னுடைமை யானதனால்,
என்னையலால் என்னோர் இலை.

மின்னை - (எனக்கு என் உயிரினும் இனியவளும் எல்லாப்பொருள் களினும் சிறந்தவளுமாகிய) அகலிகையை. அளித்தாய்க்கு - கொடுத்த உனக்கு. உன்னினால் - ஆராய்ந்து பார்த்தால். 10-29.

னை,நா ரதன்முகமன் எற்றுக்(கு?)யான் வேறோ?
உனினால் இருவேம் ஒருவேம்:—நினின்நான்வே
றல்லேன் எனின்நீவே றல்லாய். இஃதெல்லாம்
வல்லாய் அறியாயோ? மற்று.

முகமன் - உபசாரவார்த்தை. எற்றுக்கு-எதற்கு. உ(ன்)னினால். நி(ன்)னின் (நின்று), எ(ன்)னின் (நின்று). மற்று - அசை. 10-30.

இருவேம் ஒருவேமா எய்தலா னன்றே,
ஒருநீ உனதுள்ளத் துள்ளே—கருதியதென்
உள்ளம் உணர,உனை உற்றேன்; எனைவேறாக்
கொள்ளல் தகுதிகொலோ? கூறு. 10-31.

### அகலிகையைக் கௌதமர் அடைதல்.

நான்முகமன் வேண்டலேன்; நங்கை தனையடைவான்,
நான்முகமன் ஆணைபெறல் நன்றென்று,—பான்மிகல்(கு)
ஆத்தானம் ஆம்தொழுநீத் தன்பனொடு சென்றலரோன்
ஆத்தானம் தன்னை அடைந்து,

முகமன் - துதிமொழி. நால் (-நான்கு) முகம் (உடைய) மன் (-இறைவன்)-பிரமன். பால் மிக நல்கு ஆ தானம் ஆம் தொழு-பால் மிகுதியாகக் கொடுக்கும் பசுக்களின் இடமாகிய தொழு. அலரோன் - பிரமன். ஆத்தானம் - சிறந்த உறைவிடம். 10-32.

சூள்முடித்த வாறுரைத்தான். 'தோகை மணத்தினை இந்
நாள்முடிக்க' என்று நளினத்தோன்—சூள்முடித்த
கோதமற்கம் மாதைக் கொடுத்து விடைகொடுத்தான்.
மாதவத்தர் சென்றார் மகிழ்ந்து.

தோகை மணத்தினை இந் நாள் முடிக்க—அகலிகை கல்யாணத்தினை இன்றைத்தினமே நிறைவேற்றிடுக. நளினம்- தாமரை. நளினத்தோன்- பிரமன். 10-33.

இமையா விழிகொண் டிளைப்பா றிடற்கும்
அமரா தலைந்தனைய ஆவைக்—கமையோடு
தேடுநாள் அந்தோ! செவியுற்றேன் இவ்எல்லாம்.
வாடினேன் என்செய்வேன் மற்று.

கமை - பொறுமை. இவ் - இவை. 10-34.

முகில்மிசைநான் மூவுலகு முற்றும்போய் எய்தா
அகலிகைதான் நொய்தின் அவன்கைப்—புகுதல்,
முடவனது வாயுள் முகில்தோய் கிளைத்தேன்
வடிதலினை நேருறுமால் வாய்ந்து.

மூ உலகு - மூன்று உலகம். நொய்தின் - எளிதாக. அவன்கைப் புகுதல் - (கௌதமன் தழுவும்படி அவனுடைய இரண்டு) கைகளின் உள்ளே செல்லுதல். கிளைத்தேன் - கொம்புத் தேன். வாய்ந்து (வாய்க்கு நேராக வாய்ந்து) வடிதலினை நேருறும். ஆல் - அசை. 10-35.

வெந்தீயில் வீழ்ந்து வெதும்பி எழுந்தார், அச்
செந்தீயில் வீழ்ந்த செயலென்ன,—அந்தோ!
ஒருமுறைதுஞ் சுற்றார்மீட் டோர்முறைசெத் தென்ன,
இருமுறையும் தோற்றேன் இனைந்து.

துஞ்சுற்றார் — செத்தார். செத்தென்ன — செத்தாலென — செத்தாற் போல. இனைந்து - வருந்தி. 10-36.

முற்றிற்று.

# அகலிகைவெண்பா

## இரண்டாம்பதிப்பின் அநுபந்த வசனம்.

### அகலிகையைக் கௌதமர் அடைந்த வரலாற்றை இந்திரன் நினைவுகூர்தல்.

[6-ம்பாட்டின் வசனமுதல் (இவ்வநுபந்தம் உள்பட) 43-ம்பாட்டு வசனத்தில் 'அரிதாயிருக்கிறது' என்பதுவரையும், சபையிலிருக்கும் பொழுது, இந்திரனுக்கு அகலிகையின் ஞாபகம்வரக், காமபரவசனாகி, அவள்விஷயமாக முன் நிகழ்ந்தவற்றை அவன் மனத்துள் நினைந்து கொண்டதேயன்றி, யாருக்கும் வாய்விட்டுத் தெரிவித்ததன்றென்பதை வாசிப்போர் கவனத்தில்வைத்துக்கொண்டு வாசித்தல் வேண்டும்.]

*அகலிகையை அடைதற்குப் பிரமதேவர் நியமித்த முதற்சபதம்.*

10 தேவர்கள் அமிர்தம் பெறுதற்காகக் கடலைக்கடைந்த காலத்திலே உண்டாகிய உண்ணமுதத்தோடு அந்தப் *பெண்ணமுதும் தோன்றினள். அவள் தோன்றிய அப்பொழுதே, †நானும் கௌதமனும் அவளைக் காதலித்தோம். அவ்வாறு காதலிக்கவே, எங்களில் எவன் அவளைப் பெறுதற்குரியனென்று முடிவுசெய்தற்காகப் பிரமதேவர் எங்களைநோக்கி 'நீங்கள் இருவீரும் இந்தக் கடல்நீர்க்குள் முழுகுங்கள், உங்களில் எவன் பின் எழுவானோ அவனே இவளுக்கு நாயகன்' என்றார். அப்படியே நாங்கள்முழுக, நான்முன்னெழுந்துவிட்டேன். எனக்குப் பின் அவன் எழுந்தான். இவ்வாறாக, யான் தோற்றதனால் வெகுண்டு இனிச்செய்யத்தக்கதென்னென்று ஆலோசித்துப் பின்வருமாறு பிரமதேவரைநோக்கிக் கூறினேன்.

---

* அகலிகை.

† இந்திரன்

10- 1 பிரமதேவரே, யானும் யோகஞ்செய்யும்படி நேர்ந்தசமயங்களில் மூச்சடக்கப்பழகியுள்ளேனயினும், இவன் அதுவே எப்போதும் செய்வோனய் என்னினும் அதிகமாக மூச்சடக்கப் பழகியிருக்கின்றான். ஆதலினாலேதான், இப்போது நீர் கூறிய சபதத்தில் வெற்றிபெற்றான். இது இருவருக்கும் சமமான சபதமன்று. நியாயம் தவறிப்போகாமல், எங்கள் இருவருக்கும் சமமானதாக, வேறொருசபதம் கூறுதல்

இரண்டாம் சபதம் நியமிக்கும்படிபிரம தேவரை இந்திரன் வேண்டல்.

10- 2 வேண்டுமென்றேன். உடனே பிரமதேவர் என்மேற்கோபங்கொண்டு, சீ சீ! இந்திரா, இப்படிப்பட்டவார்த்தைகள் கூறுவது யோக்கியமாமோ! ஆசையினாலே புத்திகெட்டுப்போனயோ!. அயோக்கியர் கூறும் வார்த்தைகளைக் கூறினய்! போ! போ!

10- 3 தூரஒழிந்துபோ! என்றார் உடனே, கௌதமன், பிரமதேவரை நோக்கி ஈசுவரன் கிருபையினால் நானே இன்னமும் வெற்றிபெறுவேன்; இவன் வேண்டிக்கொண்டபடியே வேறொருசபதம் நிய

10- 4 மிப்பீராக என்றான். அப்போது, பிரமதேவர், என்னைநோக்கி, உன்எதிரியே வேறொருசபதங்கூறும்படி சொன்னதனால், நான் புதுமையானதாக ஒருசபதங் கூறுவேன். இதுவே முடிவானது. இனிமேல் வேறொருசபதமுங் கூறமாட்டேன். இது உறுதியென்று நன்றாகத் தெரிந்துகொள்வாயாக.

10- 5 அந்தச் சபதமாவது, முன்புறம்போலப் பின்புறமும் முகமுள்ள ஒருபசுவை எவன் முந்திக்கண்டு மூன்றுமுறை வலஞ்செய்துவருவானே, அவனே இவளுக்குக் கணவனுவான் என்பது.

இரண்டாம் சபதம்.

10-6 என்று பிரமதேவர்கூறவே, இந்தச் சபதம் எனக்கே அநுகூலமானது. ஏனெனில், இந்தக் கௌதமன் வாகனம் ஒன்றும் இல்லாதவனுதலால், காலால் வருந்தி நடந்து திரிந்து தேடி அப்படிப்பட்ட அருமையான பசுவைக் காணமாட்டான். நான் மேகவாகனருடனுய் விரைவாக எங்கும் சென்று அதனைக் கண்டு, அதனால் மேன்மையும், மகிழ்ச்சியும் கொண்டு, இங்கே திரும்புவேன். திரும்பின உடனே

இரண்டாம் சபதத்தைப்பற்றி இந்திரன் எண்ணுதல்.

10-7 அகலிகையை அடைந்துவிடுவேன். இவன் *அணிலேறவிட்ட
நாய்போல ஆகி, ஏக்கமடைந்து வருந்த, நான் இவளை இந்த
மண்ணுலகத்திலே கல்யாணம் செய்துகொண்டு, இவளுடன்
விண்ணுலகம் போய், அங்கே என்குடிகளாகிய தேவர்கள் இவள்
குடிகளாக, இவள் கிரீடம் சூடிச் செங்கோல்கைக்கொண்டு அர
சாள, நான் இவளுக்கு அடிமைக்கும்அடிமையாய்த் தொண்டு
புரிந்துவாழ்வேன். அவ்வாறு வாழ்வது நான் இதுவரை அர
10-8 சாண்ட இன்பத்திலும் அதிக இன்பந் தருவதாம். சரசுவதியைக்
கல்யாணஞ்செய்துகொண்ட இந்தப் பிரமதேவரும், இலக்குமி
யைக் கல்யாணஞ்செய்துகொண்ட அந்தத் திருமாலும், பார்வதி
யைக் கல்யாணஞ்செய்துகொண்ட பரமசிவனும் இவளைக் கல்
யாணஞ்செய்துகொண்ட எனக்குச் சமானமாகார். ஆதலால்
மற்றைத்தேவருள் என்னைநேர்வார் யார் இருக்கின்றார்கள். ஒரு
10-9 வருமிலர். மேற்கூறிய மூன்றுமாதரும் முறையே தங்கள்
கணவரது நாவையும் மார்பையும் இடப்பாகத்தையும் தாங்கள்
வாழும் இடமாகக்கொண்டு, தங்கள் கணவரது உடலையே
அடைந்தார்கள். உடலிலும் முழுதும் அடையாமல் ஒருபாகத்
தையே அடைந்தார்கள். ஆதலால் அவர்கள் அறிவில்லாதவர்
கள். இவளோ, தனது கணவனாகிய எனது (உடலை இலட்
சியம் பண்ணாமல், அதனினும் மிகச்சிறந்த) உள்ளமுழுமை
யுமே தனக்கு உறைவிடமாகக் கொள்ளைகொண்டுவிட்ட கள்ளம்
10-10 மிகுந்த சமர்த்தியாயுள்ளாள். இவள் தன்கணவனது இருதயத்
திலே வாழ்தல்போலத் தாங்கள் தங்கள்கணவரது இருதயத்
திலே வாழப்பெற்றோமில்லையே என்ற ஏக்கத்தினாலோ, அவர்க
ளும் சரசுவதி வெளுத்தும், இலக்குமி சிவந்தும், பார்வதி
10-11 பசந்தும், நிறமாறிப்போனார்கள். அவர்களெல்லாரும், தங்கள்
தங்கள் கணவரது உடலிலே எப்போதும் நீங்காமல் வாழ்வோ
ராய்த் தங்கள் கணவருக்கு உடலோடுடலானார்கள். இவளோ,
10-12 தன் கணவனாகிய எனக்கு உயிரோடுயிரானாள். கண்ணிற் சிறந்த
கண்ணாகவும் கருத்திற்சிறந்த கருத்தாகவும் உயிரிற்சிறந்த உயி

* அணிலேறவிட்ட நாய்போல என்பது ஒருபழமொழி. தான் பிடிக்க முயன்ற அணிற்பிள்ளையைத் தான் ஏறக்கூடாத மரத்தின்மேல் ஏறவிட்ட நாய் போல என்பது கருத்து.

ராகவும் உள்ள இவளோடுகூடிவாழும் வாழ்வே வாழ்வாவது: மற்றெந்த வாழ்வும் தாழ்வாவதேயன்றி வேறொன்றுமாகாது.

10-13 என்று பலபல இனிய எண்ணங்களை எண்ணிக்கொண்டு மேகவாகனத்தின்மீதேறி எல்லாத்திசைகளிலும் சென்று, அந்தப் பசுவை நாடித் தேடலானேன். பகலெல்லாம் தேடியதனோடு அமையாமல், என் ஏவுதலால் மேகம் மின்னி நின்று இருளை ஓட்டிவிட, இரவு பகல்போலாக, இராக்காலங்களிலும் விடாமல் நான் தேடி அலைந்து நொந்து சோர்ந்து துன்ப

*இந்திரன் இரண்டாம் சபதத்தை நிறைவேற்ற முயன்றுதவறிவருந்தல்*

10-14 மடைந்தேன். அந்தப் பசுவை நான் பூலோகத்திலே காணவில்லை. தேவலோகத்திலும் காணவில்லை. பாதாளலோகத்திலேயுங் காணவில்லை. இவ்வாறாக அப்பசுவைக் காணாததனால்

10-15 எனக்கு உண்டாகிய துன்பம் மிகவும் கொடிதாயிருந்தது. இப்படிக் கொடுந்துன்பமடைந்திருந்த சமயத்திலே, யான் விரைவான மேகத்தின்மேலேறிப் பலநாளாக இராப்பகல் ஓயாமல் எங்கெங்கும் அலைந்துதேடியும் காணமுடியாமற்போன பசுவை ஒருவேளை கௌதமன் கண்டுவிட்டானோவென்ற நினைவு தோன்றவே, என் தேகம் வேர்க்க மனம் சாகுந்தருணத்திலுள்ளார்படும் மரணவேதனைபோன்ற வேதனையை அடைந்தது.

10-16 யான் இவ்வாறாக மனவேதனையோடு அந்தப் பசுவைத் தேடி அலைந்துகொண்டிருந்தேன். அவன் அதைத் தான் எவ்வாறாயினும் கண்டுகொள்ளுதற்கு ஈசுவரன் கிருபைசெய்யும்படி அவரை நோக்கித் தவஞ்செய்வேனென்று தியானம்பண்ணிக்கொண்டிருந்தான். அப்படி அவன் தியானஞ்

*நாரதர்உதவியினால் கௌதமர் இரண்டாம் சபதத்தை நிறைவேற்றல்.*

10-17 செய்துகொண்டிருக்கும்போது, வானத்திலே, நெடுந்தூரத்திலே, ஒருஜோதி பிரகாசிக்கக் கண்டான். கண்டவன் அது எவ்வாறு தோன்றியது, என்னதன்மையுடையது என்று ஆராய ஆரம்பிக்கும்முன்பே, அந்தஜோதி அவனைநோக்கி விரைந்து சமீபிக்க, அதிலே சிவந்தமேனியும் சடைமுடியும் தோன்ற, தான் தியானித்துக்கொண்டிருந்த சிவபெருமானே பெருங்கருணைபுரிந்து

10-18 பிரத்தியட்சமாகக் காட்சிதந்தருளவந்தாரென்று கருதிப் பூமி
யின்மீதே பகவானே! என்று தோத்திரஞ்செய்துகொண்டு
விழுந்து சாட்டாங்கநமஸ்காரம்பண்ணினன். அப்படி நமஸ்
காரம்பண்ணிய சமயத்திலே கிட்டவந்துவிட்ட *நாரதன் அவனை
வாரியெடுத்து ஆலிங்கனம்பண்ணி, எனது நண்பனே, இங்கே
நடந்ததெல்லாம் நானறிவேன். நீ சொல்லித் தெரியவேண்டிய
தொன்றுமில்லை. எப்படி யறிவே னென்றால், சொல்கிறேன்
10-19 கேள். ஒருவர் மனத்திலே நினைப்பது தூரத்திலேயுள்ள மற்
றொருவருடைய மனத்திலே தோன்றுவது ஆச்சரியமானதாயி
10-20 னும் உண்மைநிகழ்ச்சியன்றோ! அத்தகைய தூரவுணர்ச்சியினு
லே, நீ பிரமதேவர் கூறிய பசுவை எவ்வாறு காண்பது, கண்டா
லன்றி அகலிகையை அடையலாகாதே யென்று கவலையடைந்
தது என்மனத்திலே தோன்ற, உடனே அந்தக்கவலையை நீக்
கும்பொருட்டு நான் உன்பால் வந்தடைந்தேன். ஒருவன் தன்
சிநேகிதனைச் சந்தித்து அளவளாவுங்கால், அவன் கவலையுள்ள
வனுயிருந்தால், அந்தக் கவலை (சிநேகிதனுல் பாகிக்கப்பட்டுப்)
பாதியாகுதலும், களிப்புள்ளவனுயிருந்தால், அந்தக்களிப்பு
(சிநேகிதனுற் கூடச்சேர்ந்து அநுபவிக்கப்பட்டு) இரட்டியாத
10-21 லும் அநுபவசித்தமானவை. உன்னை உலகத்தார் 'பிரமசாரி
பிரமசாரி' என்று வழங்குவது ஒழிய, ஓர் அழகிய மனைவி
யுடன் இல்வாழ்வானுகவைக்கும்படி யான் நெடுங்காலமாகக்
கருதியிருந்த கருத்து நிறைவேறுங்காலம் நான் எதிர்பார்த்ததி
10-22 னும் விரைவாக வந்திருக்கின்றது. அதோ தோன்றுகின்ற
சமீபத்திலே உள்ள தொழுவிலே, ஆயிரம் பசுக்கள் நிற்கின்றன.
இந்தக் காலம் பசுக்கள் பூர்ணகர்ப்பமாகியிருக்கும் காலமாத
லால், நீ பார்க்கவேண்டிய முன்னும் பின்னும் முகமுள்ள பசு
வை அங்கேபோய் எளிதிற்காண என்னேடுவா. வேறிடங்களிற்
10-23 காணக்கருதி வீண்முயற்சி செய்யவேண்டாம் என்று நாரதன்

* மிகுந்த தூரத்திலே கேவலம் பகுத்தறியக்கூடாத ஒரே பிண்டமான ஜோதியாகவும், குறைந்த தூரத்திலே சிவந்த தேகமும் ஜடைமுடியும் உடையதாகத் தோன்றித் தான் தியானித்துக்கொண்டிருந்த சிவனேயாகவும் (சிவனென்றெண்ணிக் கீழேவிழுந்து தொழுதுகிடந்த தான் தூக்கிநிறுத்தப்பட்டபோது) சமீபத்திலே தன் சிநேகிதனுகவும் கௌதமர்கண்டது நாரதர் உருவை.

கூறக் கௌதமன் அவனைநோக்கி,—இந்தப் பூமியிலே முன் புறத்திலே இரண்டுமுகமுடைய கன்றை நான் பார்த்திருக் கிறேனென்றாலும், எந்த இடங்களிலும் உள்ள பசுக்களிலும் முன்னும் பின்னும் முகமுடைய பசுவொன்றையும் நான் பார்த்த
10-24 தில்லையென்று கூறினான். அதற்கு நாரதன், மறுமொழியொன் றுங் கூறாமல், அப்படிப்பட்ட பசுவைப் பிரத்தியட்சமாகக் காட்டுதலே தக்க மறுமொழியாமென்று கருதிக் கௌதமனது கையைப்பற்றிச்சென்று முன்சொன்ன தொழுவினுள்ளே கொண்டுவிட்டு அங்கே நின்ற பசுக்கூட்டத்திலே சூலு ளைந்துகொண்டிருந்த ஒரு பசுவைச் சுட்டிக்காட்டி அந்தப்பசு வுக்குப் பின்புறமும் முகமிருக்கிறது, கிட்டப்போய் உற்றுப்
10-25 பார் என்றான். அப்படியே கௌதமன் அப்பசுவின் அருகே போய்ப் பார்த்து நாரதன் சொன்னபடி பின்புறத்தே முகம் காணப்படாமையால், ஏ, நாரதா, நீ என்னைப் பரிகாசம்பண்ணு கின்றாயோ? என்று சொல்லஆரம்பித்த தற்சமயத்திலே, அப் பசுவின் பின்புறத்திலே கன்றின்முகம் வெளிப்பட அதனால் முன்போலப் பின்னும் முகமுடையதாகத் தோன்றிய அந்தப் பசுவை மூன்றுமுறை வலம்வந்து, அகலிகையை அடைந்து விட்டோமென்று மனமுவந்து தன்தோழனைப் பார்த்துக் கூறு கின்றான்.

10-26. தியானஞ்செய்வோர்களுடைய துன்பங்களெல்லாவற்றை யும் நிவிர்த்திசெய்யும் சிவபெருமானது திரு வடிகளைத் தியானித்து அவருடைய திரு வருளால் யான் அடையவிரும்பியதை அடை

நாரதருக்குக் கௌதமர் நன்றி யறிவு கூறல்.

யப்பெற்றேன். அவருடைய திருவடிகள் வாழ்க. அவரே போல வந்து என்னை வாழ்வடையச்செய்த நீ எல்லா நன்மைக
10-27 ளும் எய்தி வாழ்வாயாக. ஆடை அவிழ்ந்தவன்கை, அவன் வேண்டாமலே, அதனை உடனே கட்டி உதவுதல்போல, எனக் குற்ற கவலையை நான் வேண்டாமலே உடனே நீக்கி உதவிசெய் தாய். நீ எனக்கு என் உயிருக்குயிராகிய அகலிகையைத் தந்த தனால், சாதாரணமான தேவியைத் தந்தாயல்லை, எனது ஆவிக்கு
10-28 ஆவியையே தந்தாயானாய். ஆகாயத்திலே நீண்ட சடையுடனும்

சிவந்த மேனியுடனும் தோன்றிச் சிவபெருமானேயென்று நான்
காலில்விழுந்து கும்பிடச்செய்த உருவினாலும், (நான்
அகலிகையை அடைய) எண்ணியதை எண்ணியபடியே
அடையும்படி செய்த அருளினாலும் நீ ஈசனை ஒத்தாய்.
10-29 எனக்கு என்னினும் இனியவளும் எல்லாப்பொருள்களி
னும் சிறந்தவளுமாகிய அகலிகையையே கொடுத்துதவினை.
அவ்வாறு உதவிய உனக்குச் செய்யத்தக்க கைம்மாறு ராச
ராசர்களிடத்துமே யில்லை. அப்படியிருக்க, என்னிடத்தில்
உனக்குப் பிரதிஉபகாரமாகக் கொடுக்கத்தக்கது யாதிருக்கக்
கூடியது. என்னையன்றி வேறு ஒன்றுமில்லை. ஆதலால் என்னை
யே கொடுத்தேன். ஏற்றுக்கொள்வாயாக. உனக்கு உன்னை
யன்றி ஒரே சமானப்பொருள் உள்ளது. அது ஈசனே. உனக்கு
உடைமையாகிய எனக்கு யானே நேர்: என்னையன்றி வேறொரு
சமானப்பொருளும் இல்லை. நீங்கள் இருவீரும் அவரவர் அவ
ரவரையொத்தும் ஒருவர் மற்றொருவரையொத்தும் இரண்டு
சமானப்பொருள்களை உடையீர்கள். யானோ, உனது உடைமை
யாகிய காரணத்தால், என்னையன்றி ஒருவரையும் ஒவ்வாமல்
ஒரே சமானப்பொருளுடையேனாய் நும்மிருவரினும் அதிகனாகி
10-30 னேன் என்றுபுகழ, நாரதன், அவ்வாறு புகழ்வதைத்தடுத்து
எனக்கு உபசாரவார்த்தை எதற்காகக் கூறுகின்றாய்? அந்நிய
னுக்கன்றோ கூறவேண்டும். நான் உன்னினின்று வேறானவ
னல்லேனன்றே. ஆராய்ந்துபார்த்தால் நாம் இருவேமும் ஒரு
வேமே. உன்னினின்று நான் வேறல்லேன், என்னினின்று நீ
வேறல்லாய். எல்லாம் தெரிந்த உனக்கு இவ்வுண்மை தெரிந்
10-31 ததுதானே. நாம் இருவரும் அபேதமாய் ஒருவராகவே இருத்த
லான்றோ, நீ ஒருவருக்கும் சொல்லாமல் உன் மனத்துக்
குள்ளே நினைத்ததை, நினைத்தபடியே என்மனம் உணர, அத
னால் நான் உன்னிடம் வந்துசேர்ந்தேன். அவ்வாறு சேர்ந்த
என்னை நீ அந்நியனைக் கருதிப் புகழலாமோ என்று கூறிப்
பின்னும் கூறுகின்றான்.

10-32 நான் உபசாரவார்த்தைகளில் விருப்பில்லாதவன். அகலிகையை நீ அடைவதற்குப் பிரமதேவாது கட்டளையைப் பெறும்படியாக, நாம் இனித் தாமதஞ்செய்யாமல் அவரிடம் செல்வதே நல்லதென்று கூறி, வளமாகப் பால்கொடுக்கும் பசுக்கள் வாழும் அந்தத் தொழுவைநீங்கித் தன்சிநே

அகலிகையைக் கௌதமர் அடைதல்.

10-33 கிதனோடு பிரமதேவரை அடைந்து அவருக்கு அவர் நியமித்த சபதத்தைக் கௌதமன் நிறைவேற்றிய விவரத்தைத் தெரிவித்தான். உடனே, அவர் இந்நாள் நன்னாள், இன்றே அகலிகை கல்யாணத்தை நிறைவேற்றுக என்றுசொல்லிக் கௌதமனுக்கு அகலிகையைக் கொடுத்து எல்லாருக்கும் விடைகொடுக்க, அவர்கள் மகிழ்ச்சியடைந்து தங்களிடம் சென்றார்கள்.

10-34 இறைப்பொழுதும் இளைப்பாறுதற்கும் தங்காமல் பொறுமையுடனே அலைந்து (என் தெய்வப்பிறப்புக்கு இயல்பாகவுள்ள) இமையாத கண்களால் அந்தப் பசு எங்கேயுள்ளதென்று நான் தேடிப்பார்த்துக்கொண்டிருந்த நாள்களிலே கடைசியான ஒருநாளிலே இந்த வரலாறு முழுதுங் கேள்வியுற்றேன். அதனால் வாடி வருந்தினேன். வேறொன்றும் செய்

இந்திரன் தான் உற்ற தோல்விக்கு வருந்தல்.

10-35 தற்கில்லாதவனாயினேன். நான் மேகவாகனுருடனாய்ச் சுவர்க்க மத்திய பாதாலமென்ற திரிலோகங்களும் சென்றும் எனக்குக் கிடையாத அகலிகை கௌதமனுக்கு எளிதாகக் கிடைத்தது, மேகந் தோயும்படி உயர்ந்த கொம்பிலுள்ள தேன் ஒரு முடவனுடைய வாய்க்கு நேராக வாய்ந்து வடிதலினை ஒத்தது.

10-36 கொடிய தீயிலேவிழுந்து சுடப்பட்டெழுந்தோர் திரும்பவும் அந்தத் தீயிலேவிழுந்தாற்போலவும், ஒருமுறை மாண்டார் மறுமுறையும் மாண்டாற்போலவும், நான் இரண்டுமுறை தோல்வியடைந்து வருந்துவேனாயினேன்.

முற்றிற்று.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தார் **1921-௵ மார்ச்சு௴ 5௳** நடத்திய

# ஆங்கிலத்தமிழ்ப்பரீக்ஷைவினா.

## பீ.ஏ. வகுப்பு.

## I. இலக்கியம்.

பரிக்ஷகர்:—*A. M.* சடகோபராமாநுஜாசாரியர்.

1921-௵ மார்ச்சு௴ 5௳ சனிக்கிழமை பகல் 10—1.

[அம்சம் 120.]

N. B.—கட்டுக்கேள்விகள் VIII. ஒவ்வொன்றிலும் ஏதேனும் நான்கிற்கு விடையெழுதினாற் போதும்.

I. 1. 'பட்டினப்பாலை' பொருளென்ன? பா, திணை, துறை யாவை? 1. 'நேரிழைமகளிருணங்குணாக்கவரும்' 2. 'பொற்காற்புதல்வர் புரவியின்றுருட்டும்' 3. 'வயலாமைப் புழுக்குண்டும், வறளடம்பின் மலர்மலைந்தும்' இவை என்னென்ன அடிகள்?

2. இந்நூலிலிருந்தும் தமிழ்நாட்டுப் பழைய கொள்கைகள் சரித்திர நாகரிக விஷயங்கள் சில கூறுக.

3. கரிகாலன் வீரச்செயல்கள் என்னென்ன வெளியாகின்றன.

4. எந்தெந்தக் காரியங்களுக்காகப் பட்டினத்தில் கொடிகள் அசைந்துகொண்டிருக்கும்?

5. வைசியர் செய்கைகளிற் சில கூறுக.

II. 1. பொருளெழுதுக.—கூடல், மஞ்சிகை, அட்டி, இருத்து, கவான், புதை, சிமிலி, தநர், இதை.

2. பின்வரும் உவமைகளாற்றெரிவன யாவை? 'நெடுநகத்துப் பகல்போல, மதிசேர்ந்த மகவெண்மீன், கான்யாற்றுக் கருப்பம்பூ, நிலவடைந்த இருள், காந்தளந்துடுப்பிற்கவிகுலை.

3. 'மணிமேகலை' பட்டினப்பாலைக்குப்பிந்தியதென்பதற்கு இரண்டாதாரம் காட்டுக.

4. நாலுவாய்மை, ஐந்துசீலம், ஐம்பெருங்குழு, எண்பேராயம்; யாவை?

5. சித்திராபதி, காஞ்சனன், காயசண்டிகை, தீவதிலகை; இவர்கள் யார்?

III. 1. அந்தாாணம், ஏதுநிகழ்ச்சி, இலவந்திகை, பட்டிமண்டபம், கடைமுகம்; இவற்றை விளக்குக.

2. மணிமேகலையென்பாள் கற்றுத் துறைபோகிய கலைகளிற் சிலவற்றையாவது கணவனையிழந்த பத்தினிப்பெண்டிர் செய்கைத்திறத்தையாவது கூறுக.

3. சுதமதிகூறிய உடம்பின் அசுத்தங்கள் யாவை?

4. பளிக்கறைமண்டபவனத்துள் தாமரைப்பீடிகையின் செய்கை விநோதம் யாது?

5. மணிமேகலை செல்லத்தகாததாகச் சுதமதியாற் குறிப்பிடப்பட்ட இடங்கள் யாவை?

IV. 1. எச்சமும் சிறப்புமாய்வந்த உம்மை, ஆக்கம், இல்பொருளுவமை, அர்த்தாபத்தி, செற்பொருட்பின்வருநிலை: இவற்றுக்குத் திருக்குறளிலிருந்து உதாரணம் காட்டுக.

2. இருபொருள்கூறுக:— "பொய்யாமைபொய்யாமையாற்றினறம்பிற, செய்யாமைசெய்யாமைநன்று" "எல்லாவிளக்கும்விளக்கல்ல" "அருளல்லதியாதெனிற்கொல்லாமைகோறல்"

3. கீற்றிட்டவற்றிற் காதாரத்துடன் பொருள்கூறுக:— குன்றிமூக்கிற்கரியாருடைத்து, கள்வார்க்குத்தள்ளுமுயிர்நிலை, தன்னையே கோல்லுஞ் சினம்.

4. பின் வருவனவற்றை விளக்கியுரைக்க:—நல்லாற்றுனுடி, துறந்தார்போல வஞ்சித்து, அளவின்கணின்றெழுகலாற்றார்.

5. பின்வரும் உவமைகளாற் றெரிவன யாவை?

   1. 'பெற்றம்புலியின்றோல்போர்த்துமேய்ந்தற்று'
   2. 'கணைகொடிது யாழ்கோடுசெவ்விது'
   3. 'நிலத்தறைந்தான்கைபிழையாதற்று'

V. 1. 'யாமெய்யாக்கண்டவற்றுளில்லையெனைத்தொன்றும் வாய்மையினல்லபிற' என்று முற்கூறிப் பின் 'ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று' என்று முரணிக்கூறியது எவ்வாறு பொருந்தும்.

2. பூவைநிலை, கையறுநிலை, செவியறிவுறூஉ இத்துறைகளை விளக்கி ஒவ்வொன்றும் இன்னின்ன திணையைச் சேர்ந்த தென்று தெரிவிக்க.

3. இலவந்திகை—நன்மாறனைப்பாடிய புலவர்கள் எவர்கள்? அவர்கள் அவனைப்பற்றிச் சொல்லுவ தென்ன ?

4. திருமாவளவனும் பெருவழுதியும் ஒருங்கு எவ்வாறு வர்ணிக்கப்படுகிறார்கள்.

5. பின் வருவனவற்றை விளக்குக:—'பொதுவெனப்போ றான்' 'விரிப்பினகலுந் தொகுப்பி னெஞ்சும்' 'விசும்பா டெருவை பசுந்தடி தடுப்ப'

VI. 1. தீயமந்தரை இவ்வுரை செப்பலும் தேவி, தூயசிந்தையும் திரிந்தது; எவ்வுரை? ஏன் திரிந்தது? அது நமக்கு நன்மையான தெப்படி ?

2. கம்பர் தமது சுதேசாபிமானத்தையும் சுபாஷாபிமானத்தையும் எப்படிக் காட்டியிருக்கின்றார் ?

3. கம்பர் திருக்குறளைத்தழுவிய இரண்டு சந்தர்ப்பம் எடுத்துக் காட்டுக.

4. அத் தயங்குதானை தமிழ்த்தலைவனையொத்த தெவ்வாறு?

5. 'என்னிற்கேகையனங்கையே கடைமுறை நல்லள்போலும்' இது யார் கூற்று? ஏன் அவ்வாறு சொல்லுகிறார்?

VII. 1. இராமலக்குமணர் அடைவதற்கு முன்னிருந்த வனக் கொதிப்புக்கு, யாது உவமை கூறப்பட்டுளது.

2. பழமொழி சங்கநூல்களுக்குப் பிந்தியதென்பதற் கோர் உள்ளாதாரங் காட்டுக.

3. முல்லைக்குத்தேரு மயிலுக்குப்போர்வையு மளித்தவர்கள் யார் யார்? இவ்விருத்தாந்தம் இன்னும் எந்தெந்த நூல்களிற் கூறப்பட்டுளது ?

4. 'ஒன்றுறா முன்றிலோ இல்' இதற்கு இருபொருள்கூறிக் கதாசந்தர்ப்பமுங் காட்டுக.

5. 'கரம்போக்கியுல்குகொண்டாரில்' 'நாவற்கீழ்ப்பெற்ற கனி', 'இனைமோ அக்காரஞ்சேர்ந்த மணல்'; இவை ஒவ்வொன்றினுடனும் கூறப்பட்டுள்ள வேறு விஷயங்கள் யாவை ?

VIII. 1. 'இம்மூன்றும் நீலச்சிற்றாடைக்கு நேர்' எம்மூன்றும்? சந்தர்ப்பங்காட்டுக.

2. 'கபிலர்' பொய்கையாரைத் தன்னிலுஞ் சிறந்தவரென்று கருதித் தன்னை வெறுத்துக்கொள்வ தென்னை ?

3. தமிழர் தர்மயுத்தம் ஆரம்பிக்கும்போது முதல் அம்பு விடுமுன் கூறுவது யாது ?

4. உபயபாரதி, துரோடகாசாரியர், கௌடபாதர், மண்டன மிசிரர், கோவிந்தபாதர்; இவர்கள் யார் ?

5. சங்கரரின் காலம் யாது ? இந்நாட்டின் வைதிகமதத்தை நிலைநிறுத்த அவர் காரணமாயிருந்த தெங்ஙனம் ?

---

## II. இலக்கணம்.

பரீக்ஷகர்:—பண்டித. மு. வேங்கடசாமிநாட்டார்.

1921வரு மார்ச்சுமீ 5உ சனிக்கிழமை பகல் 2—4.

(அம்சம் 90.)

நன்னூல்—அகத்திணையியல்.

I. (1) தமிழ்நெடுங்கணக்கிலுள்ள எழுத்துக்களின் முறை வைப்புக்கு நியாயம் கூறுக.

(2) காரணப்பெயரெல்லாம் பகுபத மாமா?

(3) ஈட்டுபொருள், அஃறிணை, தாடலை, மழகளிறு: இவற் றுக்குப் புணர்ச்சிவிதி கூறுக.

II. (1) இருதிணைப்பொதுப்பெயர்கள் எவை? இருதிணைப்பொது வினைகள் எவை?

(2) ஐ, ஆன்: இவ் வேற்றுமையுருபுகள் செய்யுளில் எங் ஙனம் திரிந்துவருதலுண்டு?

(3) அஃறிணையியற்பெயர், முற்றெச்சம், எச்சத்திரிபு, வேறு வினையுடனிகழ்ச்சி, உபலக்கணம், எதிர்நிரனிரை: இவற்றைவிளக்கி ஒவ்வோருதாரணம் தருக.

III. (1) தொல்காப்பியம் எவ்வரசன தவைக்களத்தில் யாருக் குக்கேட்பிக்கப்பட்டது?

(2) கைக்கிளை, பெருந்திணை, பாலை: இப்பெயர்களின் கார ணத்தை ஆராய்க.

(3) முதற்பொருள்கூறுங்காற் கருப்பொருளாகிய தெய்வத் தை உடன்கூறியது ஏன்?

IV. (1) வைகுறு, எற்பாடு என்ற சொற்களின்பொருளை விளக்குக.

(2) 'தெய்வமுணவே' என்னுஞ் சூத்திரத்திற் பிறவும் என் றதனாற்கொள்ளப்படும் கருப்பொருள்கள் யாவை?

(3) மான், சாடி, கிளி, அன்னம், அகில், கொன்றை புன்னை, தாமரை: இவை எவ்வெந்நிலத்திற் குரியன?

V. (1) 'மன்னர்பாங்கிற்பின்னோர்' 'வேந்தனிடைநோரீஇயவேனோர்' இவற்றில் யார் யார் குறிக்கப்பட்டிருக்கின்றனர்?

(2) 'முந்நீர்வழக்கம்' என்பதற்கு நச்சினார்க்கினியர்கூறும் பொருள் என்ன?

(3) மடலூர்தல் யாருக்குரித்து? ஊரும் முறைமையென்ன? இஃது உலகியலாமா?

VI. (1) உள்ளுறை எத்தனைவகைப்படும்? உள்ளுறையுவமத் திற்கு வாராத கருப்பொருள் யாது?

(2) பெருந்திணையின் இலக்கணம் என்ன?

(3) அகனைந்திணையைப் பலவாறு முறைப்படுத்துவதும் தொல்காப்பியர்கருத்து என்பதற்கு ஆதாரங்காட்டுக?

VII. (1) அகப்பொருட்கு உரிமையுள்ள பாட்டுக்கள் யாவை?

(2) புலனெறிவழக்கில் நாடகவழக்காவன யாவை? உலகியல் வழக்காவன யாவை?

(3) கொண்டுதலைக்கழிதல், வன்புறை, கற்பொடுபுணர்ந்த கௌவை: இவற்றை விளக்குக.

---

## III. வியாசம்.

பரீக்ஷகர்: **Justice K. G.** சேஷையர் B.A., B.L., M.R.A.S.

1921ஸு மார்ச்சுமீ 5உ சனிக்கிழமை பிற்பகல் 4½–5½

(அம்சம் 30.)

1. நட்பின் சிறப்பு.
2. மாணவர்களும் ராஜதந்த்ரத்தைச் சேர்ந்தொழுகாமையும்.
3. நிலத்துமொழிவளர்ச்சி.

இவற்றுள் யாதேனுமொன்றை விளக்கி ஓர் வியாசமெழுதுக.

---

# தமிழ்மொழியுள் வடமொழிக்கலப்பு.

முற்காலத்தில் நம் தமிழ்மொழியுள் வடசொற்கள் அருகிக்கிடந்தன. இக்காலத்திற் பெருகிக்கிடக்கின்றன. நாள்வழிஏடு, கிழமை மும்முறைஏடு, கிழமைவழிஏடு, திங்கள்வழிஏடு ஆகிய இவற்றை ஆக்குவோர்களெல்லாரும் இன்னும் வடசொற்கலப்பைப் பெருக்கிக்கொண்டு வருகின்றனர். எவ்வாற்றால் எனில், ஒருபொருளைக்குறிக்கும் தமிழ்ச்சொல் உள்ளவிடத்தும் அப்பொருளைக்குறிக்கும் வடசொல்லைக் கையாண்டும், ஆங்கிலமொழியில் உள்ளவற்றைத் தமிழில் மொழிபெயர்க்குங்காற் புதுச்சொற்கள் ஆக்கவேண்டியவிடத்து வடமொழியில் ஆக்கி அவற்றைப் பயன்படுத்தியும்வரும் இவ்வாற்றால் என்க.

இவ்வாறு நம் தமிழ்மொழி இன்னும் சிலகாலம் நடைபெற்று வருமாயின், அஃது என்னும் என்பதைச் சிறிது ஆராய்வார்களாயின், அங்ஙனம்செய்யத் துணியார். முற்றும் தமிழ்ச்சொற்களையே கையாளுவர். சொற்கள் கிடைக்காவிடிற் புதுத் தமிழ்ச்சொற்களை ஆக்குவர். இங்ஙனம் இக்காலத்தில் அருட்டிருவாளர் மறைமலையடிகள் தாம்எழுதிவரும், திருவாசகவிரிவுரையில், கூடியவரை வடசொற்களை ஒழித்து எழுதுகின்றார்கள்; முற்றும் ஒழிக்கவில்லை. ஒழிக்கமுயல்வார்களென எதிர்பார்க்கின்றாம்.

இனி மற்றைய ஏடாக்குவோர்களும் தமிழ்மொழியிடத்து அன்புள்ளவர்களானால் அவ்வாறே இனிமேல், செய்யத்தொடங்குவர். அங்ஙனஞ் செய்யத் தொடங்காதவர் அம்மொழியிடத்து அன்பிலார் ஆவர். அன்பிலார் ஆமாறு எவ்வாற்றால் எனில், அம்மொழியினது அழகும் பெருமையும் கெடுமாறு செய்யுமாற்றால் என்க. என்னை? அன்புடையார் அழகும் பெருமையும் உற்றுவிளங்குமாறு செய்வர். அஃதிலாரன்றே அவை கெடுமாறு செய்வர்; ஆகலான்.

இனிவடசொற்கலப்பைப் பெருக்குதல் தமிழ்மொழியின் அழகைக் கெடுக்குமாறு யாங்ஙனம்? எனில், அழகு என்பது "கண்டாரால் விரும்பப்படுந்தன்மைநோக்கம்" மொழிக்கு அழகாவது கேட்டாரால் விரும்பப்படும் தன்மை. அத்தன்மை தமிழ்மொழி ஒன்றினுக்கே இயற்கையாய் அமைந்துள்ளது என்பதையும் ஏனையமொழிகளுக்கு அங்ஙனம் இல்லை என்பதையும் "மொழியினது உண்மைக்கூறுபாட்டுநூல்" வல்லாராகிய

திருவாளர் மாணிக்கநாயகர் முதலியோர்பாற் கேட்டறிகின்றோம். இங்ஙனம் ஆகலின் வடமொழிக்கலப்பின் பெருக்கால் தமிழ்மொழி தன் இயற்கை அழகை இழக்கும் என்பது பெறப்படுகின்றது.

இனிப் பெருமையைக் கெடுக்குமாற்றை ஆராய்வாம். பெருமை என்பது குறையில்லாமை. மொழிக்குப் பெருமையாவது தனித்தியங்க வல்லதாய் ஒன்றானும் குறையின்றி எல்லாவாற்றானும் நிறைந்திருத்தல். தமிழ்மொழியுள் வடசொற்கலப்பைப் பெருக்கின், தமிழ்நூல் செய்யப் புகுவோர் இருமொழியினும் வல்லராய் இருத்தல்வேண்டும். இல்லையேல், சொற்களைப் பிழைப்பொருள்படும்படி பயன்படுத்திவிடுவர். உரை எழுதப்புகுவோரும் அங்ஙனமே இருமொழியினும் வல்லராய் இருத்தல் வேண்டும். இல்லையேற் பிழைப்பொருள்பட உணர்ந்து உரைப்பர்.

இனி நூற்பொருளையும் உரைப்பொருளையும் கற்கப்புகுவோரும் அந்நூலையும் உரையையும் ஆக்கியவர்களின் உண்மைக்கருத்தை உணர இருமொழியினும் வல்லராதல்வேண்டும். இங்ஙனம் தமிழ்மொழியில் நூல்இயற்றவும் உரையியற்றவும், நூலுரைகளின்பொருளைக் கற்கவும் புகுவோர் வேற்றுமொழியாகிய வடமொழியினும் வல்லராதல்வேண்டும் என்றிருத்தல் தமிழ்மொழிக்குக் குறையன்றோ? குறையுடையமொழி பெருமை அடையுமா? அடையாது. இங்ஙனம் தமிழ்மொழி பெருமையை இழக்கும்.

மேலும், தமிழ்மொழியிலே அறிவுநூல்களைக் கற்றுப் புலவராதற்கு இருமொழியினும் வல்லராதல்வேண்டும். சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய நம்மனோர்க்கு இருமொழிகளினும் வல்லராதல் அரிது. ஆகவே எளிதிற் புலவராதற்கு ஏற்றவழியையே நாடுவர். அதற்கேற்ற ஒருமொழியையே தேர்வர். அம்மொழியையே பயில்வர். அம்மொழியிலேயே நூல்செய்வர். அம்மொழியிலேயே உரை எழுதுவர். ஆகலின் அம்மொழியே சிறப்புறும். நம் தமிழ்மொழி சிறப்புக் குன்றும்.

இங்ஙனம் வடசொற்கலப்பின் பெருக்கால் நம் இனிமையும் பெருமையும்வாய்ந்த தமிழ்மொழி தன்அழகையும் பெருமையையும் இழக்க நேரிடும். ஆகவே அம்மொழியிடத்து அன்புடையாராவார் அனைவரும் இன்றமுதலே வடசொற்கலப்பை முழுதும் ஒழிக்க வழிதேடுவார்களாக. அங்ஙனமாக இறைவன் அருள்புரிவானாக.

---

கு. வி. கு. வே,

# மயின்முறைக்குலத்துரிமை.

"வெயின்முறைக்குலக்கதிரவன்முதலியமேலோர்
உயிர்முதற்பொருள்திறம்பினுமுறைதிறம்பாதோர்
மயின்முறைக்குலத்துரிமையைமனுமுதன்மரபைச்
செயிருறப்புலச்சிந்தையாலென்சொனாய்தீயோய்"

(இராமா-மந்தரைசூழ்ச்சிப்படலம்-௬௪)

ஸ்ரீராமபட்டாபிஷேகத்தை விலக்கவேண்டிக் கூனியாகிய மந்தரை கைகேசியிடங் கூறக் கைகேசிவெகுண்டுரைத்ததாக இக்கவி வந்துள்ளது.

இதில் "மயின்முறைக்குலத்துரிமையை" என்பதற்குத் தமிழ் வித்துவான்களிற் பலர் பலவிதமாகப் பொருள்கூறுகிறார்கள். ஒருவர் மையின்முறை யென்றது எழுத்து முதற்போலியாய் மயின்முறை யென்று வந்தது; குற்றமற்ற முறையுள்ளகுலம். எனப் பொருள்கூறுவர். ஒருவர் மயில் என்றதற்குக் கேகயம் என்பது பரியாயநாமம். மயில்களில் மூத்ததற்கே கலாபம் முளைக்கும். யான் கேகயத்தரசன்புத்திரியாகையால் மூத்தவர்க்குரித்தான இராச்சியத்தை விரும்பேன். என்வயிற்றுதித்த பரதனும் விரும்பான் என்ற கருத்தையடக்கித் தான் பிறந்த குலத்தின்பெருமையையும் கூறினாளென்பர். ஒருவர் ஒருமயிலுக்குப் பலகுஞ்சுகளிருந்தாலும் மூத்தகுஞ்சிற்கே உச்சிக்கொண்டை முளைக்கும் அது மரித்தபின்னரே அதையடுத்தகுஞ்சுக்கு முளைத்து வரிசையாய் வால்போல மூத்தவராகிய ஸ்ரீராமபிரானுக்கே முடிசூட்டல் முறைமை யெனக்கூறினாளென்பர். இவைகளைவிட மூத்தமயிலுக்கே கலாபம் முளைப்பதென்பதற்குத் தக்கஆதாரம் தணிகைப்புராணத்தில் இருக்கிறது.

களவுப்படலம் செய்-244.

*தன்னறிவுளதெனத் தலைவற் கிகுளை*
*முன்னுறுபுணர்ச்சி முறை நிறுத்துரைத்தல்*

"பலாவம்பொழிலினொருதாயுயிர்த்தபலமயிற்குங்
கலாவம்புனைந்தகளிமயின்மூத்ததெனக்கருதச்
சுலாவம்பரநிமிர்வெற்பினெம்மாதுக்குத்தோன்றன்முன்ன
மிலாவம்புவாய்ப்பமுதுக்குறைந்தாளெனவெண்ணமுண்டே",

இதனால், பலையிற்குங் கலாவம்புனைந்தகளிமயில் மூத்தாற்போலச் சக்கரவர்த்தி திருக்குமாரர் நால்வரினும் மூத்த திருக்குமாரராகிய ஸ்ரீ ராகவனுக்கே ராச்சியவுரிமை யென்று கூறினதாகப் பொருள்கூறல் பொருத்தமாகும்.

அன்றியும், ஸ்ரீமகாபாரதம் சாந்திபர்வத்தில் பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு ராஜதர்மங்களை யுபதேசிக்குங்கால் மயின்முறையை அநுசரிக்கவேண்டு மென்று கூறியுள்ளார். அது வருமாறு:-

"மயிலானது பலவர்ணங்களுள்ள தோகைகளை யெவ்விதம் தரிக்கிறதோ அவ்விதம் தர்மமறிந்த அரசன் பலவிதமான ரூபத்தைக்கொள்ள வேண்டும். கடுமையையும் கபடத்தையும் (வரி) வாங்குகின்றதையும் ஸத்தியத்தையும் நேர்மையையும் அதுபோலத் தைரியத்தையும் அடைந்து நடுவுநிலைமையாயிருக்கும் அரசன் சுகமடைவான். எந்த விஷயத்தில் எவ்வித உருவம் இருக்கவேண்டுமோ அந்த விஷயத்தில் அந்த உருவத்தைக் காட்டவேண்டும். அதாவது சிக்ஷையில் குரூரனாகவும் ரக்ஷையில் சாந்தனாகவும் இருக்கவேண்டும். பல உருவமுடைய அரசனுக்குச் சூக்ஷ்மமான விஷயமும் நாசமடையாது.

மயிலானது சரத்காலத்திற் சப்தியாமலிருப்பதுபோல அரசன் எப்பொழுதும் மந்திராலோசனையை வெளிவிடாமற் காக்கவேண்டும்.

மயில் இனிமையான குரலும் உடம்பின் அழகும் தன் செய்கையிற் சாமர்த்தியமும் பொருந்தியிருப்பதுபோல அரசனும் அழகானசொற்களுள்ளவனும் சம்பத்துள்ளவனும் சாஸ்திரங்களிற்சமர்த்தனுமாயிருக்க வேண்டும்.

மயிலானது நீரருவிகளில் நாட்டமுள்ளதாயிருப்பதுபோல அரசன் வரவுசெலவுகளிற் சாக்கிரதையுள்ளவனா யிருக்கவேண்டும்.

மயிலானது மலையிலுள்ள ஜலத்தை ஆச்ரயித்திருப்பதுபோல அரசன் சித்திபெற்ற பிராம்மணர்களை ஆசரிக்கவேண்டும்.

மயில் தன் தலையிலுள்ள சிகையை எப்பொழுதும் தூக்கிவைத்துக்கொண்டிருப்பதுபோலப் பொருளில் விருப்பமுள்ள அரசன் இயற்கையில் தர்மிஷ்டனென்று பிறர் நினைக்கும்படி தருமத்துக்குக் கொடிகட்டினதுபோல அடையாளங்களைக் காண்பிக்கவேண்டும்.

மயிலானது தன்னைப் பாதுகாத்துக்கொண்டு பாம்பு முதலிய வற்றை அடக்க எப்போதும் சாக்கிரதையாயிருப்பதுபோல அரசன் எப்பொழுதும் தண்டத்தைமேற்கொண்டவனும் ஆசாரத்தில் அஜாக்கிரதையில்லாதவனுமா யிருக்கவேண்டும்.

மயிலானது இருக்கிற மரத்திலிருந்து அதிகச்செழுமையுள்ள மரத்துக்குச் செல்வதுபோல அரசன் உலகிலுள்ள வரவுசெலவைக்கண்டுவரவு அதிகமும் செலவு குறைவுமாகவுள்ள காரியங்களிற் செல்லவேண்டும்.

மயில் தன் தோற்றத்தினாலேயே காக்கைமுதலியவற்றின் குறை தோன்றும்படியிருத்தல்போல அரசன் தன் நேர்மையினாலேயே சத்துருவின் குற்றங்கள் வெளியாகும்படி யிருத்தல்வேண்டும்.

மயில் உயர்ந்த செழிப்புள்ள மலைகளையடுப்பதுபோல் அரசன் உயர்ந்தவர்களும் விர்த்தியடைந்தவர்களும் மலைபோன்றவர்களுமான அரசர்களை யடுக்கவேண்டும்.

மயில் களைத்தகாலத்து நிழலையடுப்பதுபோல அரசன் இளைத்த காலத்தில் ஞாதியை ஆச்ரயிக்கவேண்டும்.

மயில் வேனிற்காலத்தில் மரத்தில் மறைந்து ஒன்றுவதுபோல அரசன் ரஹஸ்யமாய் ரக்ஷகனையடையவேண்டும்.

மயில் வருஷாகாலத்திற் களிப்பதுபோல அரசன் இரவில் ஜனமில்லாவிடததிற் களிக்கவேண்டும்.

மயில் ராத்திரியில் வெளிப்படாததுபோல அரசன் மழைக்காலத்தில் வெளிப்படாமல் அந்தப்புரத்தில் ஸஞ்சரிக்கவேண்டும்.

மயிலினுடைய குணம்போலவே ஸ்திரீகளால் ரக்ஷிக்கப்பட்டவனாக ஸஞ்சரிக்கவேண்டும். கவசத்தை விடக்கூடாது. தானே தன்னை ரக்ஷித்துக்கொள்ளவேண்டும்.

மயில் தான் ஸஞ்சரிக்கும் இடங்களிற் போடப்பட்ட வலைகளை விலக்கிக்கொள்வதுபோல அரசன் சாரர்களால் காண்பிக்கப்பட்ட விடங்களிற் கபடமாக வைக்கப்பட்ட (தன்னைக்கொல்வதற்காக வைக்கப்பட்ட

விஷம் முதலியவைகள்,) பாசங்களை விலக்கவேண்டும். தெரிந்தும் அவ்விடத்திற் செல்லுவானாகில் நாசமடைவான்.

இவ்விதம் மயிலின் தர்மப்படி யெப்பொழுதும் நடந்துவரும் மனிதன் (மயிலானது விஷமும் கோபமும் கோணலானநடையுமுள்ள பாம்புகளைக் கொல்லுவதுபோல) அதிக விஷமுள்ளவர்களும் கோபமுள்ளவர்களும் கோணலானநடையுள்ளவருமான சத்துருக்களைக் கொல்லுவான்.

மயில் புழு முதலியவற்றை வெறுக்காததுபோல அரசன் இகழ்ச்சியாயிருப்பவைகளிடத்தில் அருவைப்படக்கூடாது.

மயில் உறுதியான பக்ஷங்களையடைந்திருப்பதுபோல அரசன் உறுதியான மூலமுள்ள மந்திரிமுதலிய தன்பக்ஷங்களை நிலைக்கவைத்துக் கொள்ளவேண்டும்.

மயிலானது எப்பொழுதும் தன்னிஷ்டப்படி தன்பக்ஷங்களை விரிவாகச்செய்வதுபோல அரசன் தன்பக்ஷத்தார்களைப் பரவச்செய்கிறதென்கிற சிறந்தகாரியத்தைச் செய்யவேண்டும்.

அரசன் இப்படி மயில்போலத் தன்ராஜ்யத்தைப் பரிபாலிக்கவேண்டும்."

இவ்வாறு ஆதித்தன்குலமுதல்வனாகிய மனு முதலான எல்லா அரசர்களும் மயின்முறையிற் றவறாதவர்களாகையால், "செயிருறப்புலச்சிந்தையாலென்சொலுய்திரோய்" என்று கூறினானெனக் கூறுவது பொருத்தமாயிற் றொள்ளலாம்.

ஜி. சதாசிவம் பிள்ளை.
நால க நீலலோசனிப் பத்திராதிபர்.

---

உ

# திருக்கச்சிநெறிக் காரைக்காட்டுச் சோழசிலாசாஸனங்கள்.

(செந்தமிழ் 18-ஆம் தொகுதி 8ஆ-ம் பகுதியின் ௩௩௨-ஆம் பக்கத் தொடர்ச்சி.

(திருக்கச்சிநெறிக்காரைக்காட்டில் திருக்கையாலீசுவரர்கோவிலின் கர்ப்பக்கிரகத்தின் தென்மேற்குமூலையில் ஆரம்பம். அடிப்படை அல்லது முதற்படைவரிசை)

ஸ்வஸ்திஸ்ரீ

திருமன்னிவளர இருநிலமடந்தையும்,போர்ச்சயப்பாவையும்சீர்தனிச்செல்வியும்,தன்பெருந்தேவியாக்கிஇன்புற, நெடிதியலூழியுள்இடைதுறைநாடுந், துடர்வனவேலிப்படர்வனவாசியும், சுள்ளிசூழ்மதிட்கொள்ளிப்பாக்கையும், நண்ணற்கருமுறண்மண்ணைக்கடக்கமும், பொருகடலீழத்தரையர்தம்முடியும், முன்னவன்பக்கல்தென்னவன்வைத்த, சுந்தரமுடியும் இந்திரனாரமும், தெண்டிரையீழமண்டலமுழுவதும், எறிபடைக்கேரளன் முறைமையிற்சூடும், குலதனமாகியபலர்புகழ்முடியும், செங்கதிர்மாலையும் சங்கதிர்வேலைத், தொல்பெருங்காவற்பல்பழந்தீவும்,செருவிற்சினவில்இருபத்தொருகால். அரசுகளைக்கட்டபரசுராமன், மேவருஞ்சாந்தியமத்தீவரண்கருதி, இருத்தியசெம்பொற்றிருத்தகுமுடியு, மாப்பெருந்தண்டாற்கொண்டகோப்பரகேசரிவன்மராகியஸ்ரீராஜேந்திரசோழதேவற்குயாண்டு அ-வது (தாம் இராஜ்யாதிகாரம்பெற்ற 8-வது ஆண்டில்)

எயில்கோட்டத்துநகரம் கச்சிப்பேட்டு திருநெறிக்காரைக்காடுடைய வருஷபீசுரர்க்கு:-

இப்பழுவேட்டரையர் மகளார் முஞ்ஞைவல்லவரையர் இராஜசேகரர் தேவியார் அமராசியன் சேமடிகள்வைத்த திருநந்தாவிளக்குமூன்று

இம்மூன்றும்-சந்திராதித்தவரை எரிக்க நெய்அட்ட ஆடுகொண்ட மன்ருடி

ஊற்றுக்காட்டுக்கோட்டத்து தமனூர்நாட்டு திருநெறிக்காரைக்காட்டுப்புறம் அவ்வள்ளூர் இருக்கும் மன்ருடிமோடன்கும்பை கொண்ட ஆடு நாற்பத்தேழரையினல் திருவேகம்பனல் நிசதம் அட்டக்கடவிய நெய் ஆழாக்கும் தானத்தார் பக்கல் திங்கள்தோறும் அறவட்டி சந்திராதித்தவரை செலுத்துவதாகவும்

(2) இக்கோட்டத்து இவ்வூர் மன்ருடி எழுவன்...........றங்கடம் கொண்ட ஆடு நாற்பத்தேழரையினல் திருவேகம்பனல் அட்டக்கடவிய நெய் ஆழாக்கு இந்நெய் ஆழாக்கும் திங்கள்தோறும் அறவட்டி சந்திராதித்தவரை செலுத்துவதாகவும்

(3) இக்கோட்டத்து இவ்வூர் மன்றுடி மாறன் 'ஒட்டிபானழியன்' கொண்ட ஆடு நாற்பத்தேழரையினுல் திருவேகம்பநாழியால் மேற்படி (சிசதம்) நெய் ஆழாக்கு இந்நெய் ஆழாக்கும் ஸ்தானத்தார்பக்கல் திங்கள் தோறும் அறவட்டி சந்திராதித்தவரை அறப்பதாகவும்.

(4) மேற்படியூர் மன்றுடியான "யக்கன்" கொண்ட ஆடு இருபத்தி மூன்றெழுகாலினுல் (இஃது இருபத்துமூன்றேமுக்காலினுல் என்திருத்தல்வேண்டும்) திருவேகம்ப நாழியால் அட்டக்கடவநெய் இருசெவிடரையும் (2½ செவிடு=½ ஆழாக்கு) ஸ்தானத்தார்பக்கல் சந்திராதித்தவரை திங்கள்தோறும் அறஅட்டி (முழுதும் செலுத்தி) செலுத்துவதாகவும்,

(5) இக்கோட்டத்து ஷையூர் (திருநெறிக்காரைக்காட்டுப்புறம் அவ்வள்ளூர் "குட்டன்கலியாணகோமாடி" கொண்ட ஆடு இருபத்திமூன்றெமுக்காலினுல் மேற்படி திருவேகம்பநாழியால் அட்டக்கடவநெய் இருசெவிடரையும் (2½ செவிடு நெய்) மேற்படி தேவஸ்தான முடையார் பக்கல் செலுத்துவதாகவும்,

(6) மேற்படியூர் மன்றுடி "புலியன் கண்டன்" கொண்டஆடு இருபத்திமூன்றெமுக்காலினுல் மேற்படி திருவேகம்ப நாழியால் அட்டக்கடவநெய் இருசெவிடு...............மேற்(....படி செலுத்துவ) தாகவும்–(2½ செவிடு).

(7) மேற்படி ஊற்றுக்காட்டுக்கோட்டத்து, தமனூர்நாட்டு, திருநெறிக்காரைக்காட்டுப்புறம் அவ்வள்ளூரிலிருக்கும் மன்றுடி "திருமாகாளன்தாழி" கொண்ட ஆடு நாற்பத்தேழரையினுல் ஷை திருவேகம்ப நாழியால் அட்டக்கடவநெய் ஆழாக்கும் (1 ஆழாக்கு நெய்) ஷை தானத்தார் பக்கல் அறஅட்டி செலுத்துவதாகவும்.

(8) இக்கோட்டத்து (ஊற்றுக்காட்டுக்கோட்டத்து)மாகறல் நாட்டு வயலூர் இருக்கும் மன்றுடி "காமன்சேரி" கொண்ட ஆடு இருபத்தி மூன்றெமுக்காலினுல் திருவேகம்பநாழியால் அட்டக்கடவ நெய் இருசெவிடரையும் (2½ செவிடுநெய்) தானத்தார்பக்கல் சந்திராதித்தவரை செலுத்துவதாகவும்,

ஆகத் திருநந்தாவிளக்கு மூன்று, இம்மூன்றும் சந்திராதித்தவரைக்கும் வைத்தேன்.

முஞ்சைவல்லவரையர் இராஜசேகரர் தேவியார் அமராசியன் சேமடிகளேன். இவர் அருளிச்செய்ய எழுதினேன் இவர்கன்மி'மணலூர்கிழவன்' ஆச்சன் சிவதேவனேன். இவை என்னெழுத்து.

(தொடரும்)

காஞ்சிபுரம் அ. நடேசசெட்டி,
85. செட்டித்தெரு,
சின்னக்காஞ்சிபுரம்.

(குறிப்பு) இது, திறமையில்லாதார் தற்புகழிற் செவிகொடுக்க லாகாதென்கிறது. இங்கு, பிறர் என்றது சொல்லியகருமம் செய்து முடித்துக் கைவந்தவர் என்றவாறு. நன்மையாவது தொடங்கிய கருமத் தைச் சோர்வின்றி முடிக்கும் ஆற்றல்; அது இங்கு, புகழ்தற்கு விடய மானமையால் எழனுருபேற்றது. தகாத—ஆற்றலுள்ள வழியும் தாமே சொல்லத்தகாத. தம்மைப்புகழ்தல்—தாம் ஆற்றலுடையரெனப் பேசு தல். அரைக்காற்பொன்னுக்கு விற்பம் என்றது அரைக்காற்பொன் விலை கொடுத்தாற்போதும்; புலத்துப்புள்ளைப் பிடித்துக்கொடுப்போம் என்றபடி. கருதியகருமங் கைவந்துகாணுது, கைவந்தபிறரால் நன் மதிப்புமின்றிச் சிறியகூலிக்குப் பெரியகருமம் செய்துமுடிப்போமென்று சொல்லுமவர் தன்மதிப்பை நம்பி அவரை யொருகருமத்தில் வையற்க வென்பது கருத்து. இதனால், ஒருகருமத்தில் வைக்கப்படுவோர் அக் கருமவகைகளைக் கடைபோகமுடித்துக் கைவந்தபயிற்சியுடையராக வேனும், அவ்வாறு கைவந்தபயிற்சியுடையாராது உண்மையான நன்மதிப் புடையாராகவேனு மிருக்கவேண்டுமென்பது குறிப்பாயிற்று. "புலத் தகத்துப்புள்ளரைக்கால்விற்பேமெனல்" என்பது பழமொழிக்கூற்று.

133. பண்டின ரென்று தமரையுந் தம்மையுங்
கொண்ட வகையாற் குறைதீர நோக்கியக்கால்
விண்டவரோ டொன்றிப் புறனுரைப்பி னஃதாலவ்
வுண்டவிற் றீயிடு மாறு.

எ-து, பண்டு இவர் இப்பெற்றியாரென்று தஞ் சுற்றத்தாரையுந் தம்மையு மனத்தின் மதித்துக்கொண்டவகைக்குத் தக்கபடியாற் றம் வறுமைதீரச் சில ரைச் சிலர் நோக்கினுனேக்கப்பட்டவர்க ளந்நோக்கினுருடைய பகைவருடனே யொன்றிப் புறங்கூறின் அதுவன்றோ தாமுண்டவில்லைத் தீயிடுமாறென்ற வாறு.

(குறிப்பு) இது, செய்ந்நன்றி கோறலாகாதென்கின்றது. பண்டி வரிப்பெற்றியர் என்றது உட்கொள்ளுதற்குரிய முற்றொடர்பு முதலிய சாதனங்கூறியவாறு. இது இங்கு, கைமுதிகநியாயத்தால் பண்டின ரென்ற தொடர்புகருதாது செய்யும் பேருதவியையு மகப்படுத்திநின்றது. சிலரை என்றது உட்கொள்ளப்பட்டாரை. சிலர் என்றது உட்கொண்டி ருக்கும் கிழமையுடையோர். நோக்கினல் என்றது ஆதரித்துவந்தால் என்றவாறு. "பகைவருடனே ஒன்றிப் புறங்கூறின்" எனச் சொல்லின்

கொடுமைகூறவே அவருடன்கூடித் தீங்கிழைக்கும் செயலின்கொடுமை சொல்லவேண்டாதாயிற்று. "தாமுண்டவில்லத் தீயிடுமாறு" என்றது தாம் தின்றுவளர்ந்த வீட்டில் தீவைத்ததுபோலும் ஒரு பெரிய தீவினை யாகு மென்றபடி. இப்பழமொழி, செய்ந்நன்றி சிதைப்போனை "உண்ட வீட்டுக்கிரண்டு நினைப்போன்" என உலகவழக்கில் வழங்கப்படுகிறது. இதில் இரண்டு என்றது இரண்டாவது என்னும் பூரணப்பொருளுடைய தாய் நன்மை தீமையென்று மிரண்டனுள் நன்மையின் மறுதலையாகிய தீமையை மறைத்துக்கூறுங் குறிப்புமொழியாய் "ஆன்முலையறுத்தவற னிலோர், பார்ப்பார்த்தப்பிய கொடுமையோர்" * என்பனபோலு முபசார வழக்காயிற்று. இதன்றீமையின் கடுமையை வெளிப்படுத்துங்கருத்தால் உண்டவிற்றீயிடுமாறு எனச் சிறப்புரைப்பாட்டாற் பாட்டிற் காட்டப் பட்டது.

134. பலநாளு மாற்ரு ரெனினு மறத்தைச்
சிலநாள் சிறந்தவற்றுற் செய்க—முலைநெருங்கி
நைவது போலு நசுப்பினுப் நல்லறஞ்
செய்வது செய்யாது கேள்.

எ-து, அறஞ்செய்யப் பலநாளு மாற்ருரெனினு மறத்தைச் சிலநாளாயி னுஞ் சிறந்தவைகளானே செய்க; முலையா னெருங்கப்பட் டிறவதுபோலு நசுப் பினையுடையாய் தான்செய்த நல்லறஞ்செய்வது தன் னற்கேளுஞ் செய்யா தென்றவாறு.

(குறிப்பு) இது, நைமித்திகவொழுக்கத்தின்சிறப்புக் கூறுகிறது. இங்கு அறமென்றது நித்தியகருமமாகிய ஒழுக்கநெறியையென அறிக. பலநாளும்—நாடோறும். ஆற்ருரெனினும் என்றது ஆற்றுதல் தவற லாகாதென்னும் நியதிகுறித்துநின்றது. சிலநாள்—நித்தியத்திற் ருழ்வு நீரச்செய்யும் நைமித்திககருமத்துக்குரிய சிலதினங்கள். சிறந்தவை கள்—சிறந்தவைகளான வொழுக்கங்கள்; அவை நைமித்திககருமங்கள். நல்லறம் செய்வது என்றது சதாசாரஞ்செய்யுமுதவி என்றவாறு. நற் கேள்—தந்தைதாய். கேள்—சாதியொருமை. 'நல்லறம் செய்வது நற் கேளும் செய்யாது' என்பது இதன் பழமொழி. பொதுவாக மக்கட் பிறப்பையளிக்கும் தாய்தந்தையினும் அதனிற்சிறந்த வருணப்பிறப் பையும் குடிப்பிறப்பையு மளிக்கு மொழுக்கமுடைமை சிறந்ததென்பது இதன் பொருளாயிற்று.

* புறநானூறு செய்—கூ.

135. தெரியா தவர்தந் திறனில்சொற் கேட்டாற்
பரியாதார் போல விருக்க—பரிவிலா
வம்பலர் வாயை யவிப்பான் புகுவாரே
யம்பலந் தாழ்கூட்டு வார்.

எ-து, அறிவில்லாதார் தம்மைச் சொல்லுந் திறப்பாடில்லாதசொற்களைக் கேட்டா லதற்குத் துன்புறுதாராய்ப் பொறுத்திருக்க; பிறன்மே லன்பில்லாத வேதிலார்வாயை யடக்கப்புகுவா ரம்பலந் தாழ்கூட்டுவாரோ டொப்ப ரென்ற வாறு.

(குறிப்பு) இது, புல்லறிவாளரோடு சொல்லெதிராடலாகா தென்கிறது. அறிவில்லாதார் என்றது புல்லறிவாளர் என்றபடி. திறப்பாடில்லாத சொற்களாவன.—சொன்னபடி மெய்ப்பிக்கப்படாது நூன்முறை பிறழவுரைக்குமுரைகள். பரியாதார்போலவிருக்க என்றதனால் அவர்கள்கூறுமுரைகள் கேட்கும்போதே துன்பஞ்செய்யுமாயினும், அதனை அவர்க்குக் காட்டாது உவப்பொடுகேட்பார்போன்று பொறுத்திருக்க வென்றவாறு; வேறுபரிகாரமில்லை என்பது குறிப்பு. பிறன்மேல் அன்பில்லாத எதிலார் என்றது அறிவுடையோனொருவனிடத்தும் நண்பின்றி மாறுபடும் அவரது இயல்புகூறியவாறு. அவரதுவாயையடைக்கப்புகுவார்-அவர்சொல்லுவது தவறென்று அவருணரக்காட்டி யடக்கப்புகுவார். அம்பலந்தாழ்கூட்டுவார் என்றது இரவும் பகலு மெப்பொழுதும் புகுவாரும் புறப்படுவாருமுள்ள பொதியில்லைக் கதவுதாழிட்டுத் தலைவாயடைக்கமுயல்வாரோ டொப்பர் என்றவாறு. அம்பலந்தாழ்கூட்டுவார் முயற்சி பயன்படாவாறுபோலப் புல்லறிவாளரொடு சொல்லெதிராடுவார் முயற்சியும் பயன்படாதென்பது கருத்து. அம்பலந் தாழ்கூட்டுவார் என்ற தொடர்மொழிக்குறிப்பே இங்குப் பழமொழியாயிற்று. இது "ஊர்வாயைமூட உலைமூடியுண்டோ" எனப் பிறிதொருவாப்பாட்டால் வழங்கப்படுகிறது. இதில் ஊர்வாய் என்றது அறிவில்லாத சாமானிய சனங்களின்பேச்சையும், உலைமூடி என்றது அடங்கவுரைக்குமுரை அவரடங்காது கொதித்தற்கு ஏதுவாமென்பதையும் குறிப்பாலுணர்த்தி நின்றன.

136. அருவிலை மாண்கலனு மான்ற பொருளுந்
திருவுடைய ராயிற் றிரிந்தும் வருமாற்
பெருவரை நாட பிரிவின் றதனாற்
றிருவினுந் திட்பம் பெறும்.

இ-ள், அரிய விலையையுடைய மாட்சிமைப்பட்ட அணிகளும், நிரம்பிய பொருளும் புண்ணியமுடையாரைப் பிரிவின்றியே செல்வத்திற்குத் தகுதியில் லாதார்மாட்டும் வாராநிற்கும்; ஆதலாற் பெருமலைநாடனே! இப்பெற்றிப்பட்ட செல்வத்திற் றம் மனங் கலங்காத வறிவின்செல்வமே நன் றென்றவாறு.

(குறிப்பு) இது, பொருள்படைக்கவேண்டி இழிதொழில்புரியற்க வென்கின்றது. அணிகள்—ஆடையாபரணாதிகள். நிரம்பியபொருள்—தம் சுற்றத்தோடு தாம் ஆரவுண்டு அனுபவித்துப் பிறர்க்கு முதவும்படி நிறைந்த பொருளுடைமை. பிரிவின்றி என்றது கிட்டியவழி விலகி ஒதுங்குதற்குரிய இழிகுலத்தவரையும் விலகுதலின்றி என்றவாறு. பெற்றி—இகழ்ச்சிக்குறிப்பு; இது திட்பத்தின் உறழ்ச்சிக்குக் காரணங் காட்டியவாறு. செல்வத்தின்—செல்வத்தைவிட. மனங்கலங்காத அறிவின்செல்வம் என்றது அருவிலைமாணிகலனும் ஆன்றபொருளும் அடைதல்காரணமாக இழிதொழில்புரிய மனஞ்செல்லாத திட்பமுடைமையை. இது பிறரிடத்தின்றிக் குடிப்பிறப்புடையார்மாட்டே யியற் கையாயுள்ளதாயகுணமாதலால், திரிவிலதாயிற்று. பெறும் என்றது இங்கு நலம்பெறும் என்னும் பொருள்படநின்றமையால் நன்று என்று போந்தபொரு ளுரைக்கப்பட்டது. திருவினுந்திட்பம்பெறும் என்றது பழமொழி. இதன்பொருளே இங் கெடுத்துக்கொண்டபொருளாக வைத்து ஏதுவால் நிரூபிக்கப்பட்டது.

137. தோற்ற மரிதாய மக்கட் பிறப்பினா
லாற்றுந் துணையு மறஞ்செய்க—மாற்றின்றி
யஞ்சும் பிணிமூப் பருங்கூற் றுடனியைந்து
துஞ்சு வருமே துயக்கு.

இ-ள், தோன்றுதற்கரியதாய மக்கட்பிறப்புப்பெற்றதனாலே தமக் கியலு மளவு நல்லறத்தைச்செய்க; தடையின்றி யஞ்சப்படும் பிணியு மூப்பு மருங்கூற் றுடனேகூடித் தமக் கறிவுதிரிவாகிய மயக்கத்தா னிறந்துபடல் வருமென்ற வாறு.

(குறிப்பு) இது, அறஞ்செய்யவேண்டுமென் கின்றது. தோற்றமரிதென்றது மக்கட்பிறப்பினை யெய்தற்கருமையுணர்த் தியவாறு. மக்கட்பிறப்பினாலென்றது விதிவிலக்குகளையறிந் தொழு குதற்பாலனவாமவற்றைப் பிறபிறப்பா லியற்றவியலாமை யுணர்த்தியவாறு.

தமக்கியலுமளவும் நல்லறத்தைச்செய்தலாவது—ஒல்லும்வகையா னற வினையோவாதே, செல்லும்வாயெல்லாம்செயல்" என்ற பொய்யாமொழி கூறியவாறு புரிதல். தடையின்றி அஞ்சப்படும்பிணி—நாச்செற்று விக்குண்மேல் வருதல். துஞ்சு—முதனிலைத்தொழிற்பெயர். துயக்கால் என்னும் மூன்றனுருபு விகாரத்தாற்றொக்கது. பிணியுடனும் மூப்புடனும் கூற்றுடனுங்கூடித் துஞ்சுதல்வருமெனக் கூட்டுக. பின்னடியிரண்டும் பழமொழிக்கூற்று. அது இங்கு யாக்கைநிலையிலது என்ற துணையேநின்று விதிப்பொருளை முடித்தற் கேதுவாயிற்று.

138. கற்றானுங் கற்றார்வாய்க் கேட்டானு மல்லாதார்
தெற்ற வுணரார் பொருள்களை—யெற்றே
யறிவில்லான் மெய்த்தலைப் பாடு பிறிதில்லை
நாவற்கீழ்ப் பெற்ற கனி.

எ-து, நூல்களைக் கற்றறிந்தானுங் கற்றார்வாய்க் கேட்டறிந்தானும் மல்லாத பிறர் தெளியப் பொருள்களி னுண்மை யறியமாட்டார்; என்னே! அறிவில்லாதானொருவ னுண்மைப்பொருளை யறிந்துசொல்லுதல்,பிறிதொன்றில்லை; நாவலின்கீழ்வீழ்ந்ததொரு பழ மொருவன் பெற்றதுபோலும் என்றவாறு.

(குறிப்பு) இது, முறையான கல்விகேள்விகளில்லாதார்சொல்லும் பொரு ளொருபொருளன் றென்கிறது. கற்றார்வாய் என்ற பன்மை கற்றோர்பலரிடத்தும் பலகாற்கேட்கவேண்டு மென்னும் கேள்விமுறை யுணர நின்றது. அல்லாதார் என்றபன்மை கற்றறிந்தவனல்லாதவனும், கற்றார்வாய்க் கேட்டறிந்தவனல்லாதவனுமாகிய இருவரையு மொருங் குணர்த்திநின்றது. இதனால், பொருள்களினுண்மை தெளியவறிந்தானு தற்குக் கல்வி கேள்விகளிரண்டு மொருங்குடையனுயிருக்கவேண்டுமென் பது குறிப்பாயிற்று. தெளியவறியமாட்டாரெனக் கூட்டுக. தெளிய—மயக்கமின்றி. அறியமாட்டார் என்ற காரணவினை அறிந்துரைக்க மாட்டார் என்னும் காரியப்பொருளுணர நின்றது. அறிவில்லாதான் என்றது அதிகரித்துநின்ற கல்வி கேள்விக ளின்மையானுளதாய அறி வின்மையுணர்த்திநின்றது. அறிந்துசொல்லுதல் என்றது அறிந்து சொல்லுதலுளதாயின் அது என்றபடி. கீழ்வீழ்ந்ததென்றது மண்ணில் விழுந்து நசுங்கி மணலும் புழுதியும் படிந்ததென்றபடி. ஒருபழம் என் றது அதன் மிகுதியின்மைகுறித்தவாறு. ஒருவன் என்றது பலரும் விரும்பாமை குறித்துநின்றது. பெற்றதுபோலுமென்றது பெற்று

நுகர்வதுபோலு மென்றவாறு. ஒருவன் காவற்கீழ்ப்பெற்றகனியானது சிறிதுசுவைத்ததனையே யுமிழும்படி சுவையற்ற துவர்க்கொட்டையைப் பெரிதும் அகத்திட்டு அற்பசாரமுடைய தோட்டுத்தசையும் உண்ணற்குவேண்டாத மணலும் புழுதியும் புக நசுங்கி உண்போரா லுதாசினிக்கப்படுவதுபோலக் கல்வி கேள்விக ளில்லாதான்கூற்றும் கேட்போரால் விரும்பப்படாத சுவையற்றபொருளையே மிகவுமுட்கொண்டு வெளிப்படையில் அற்பசாரமுடையதாய் வேண்டாதனகூடி யுதாசினிக்கும்படியிருக்குமென்பது கருத்து. இதனால், கல்வி கேள்வியுடையோருரைக்கும் பொருளுரையே திராக்ஷையின் காழில்கனிபோல முழுது மனுபாவ்யமான சுவையுடையதாயிருக்குமென்பது குறிப்பு. சாரமற்றிருத்தலாற் றள்ளத்தக்கதொன்றைத் "தாழங்காய்" என வழங்கும் குறிப்புமொழிபோல அற்பசாரமுடைமையா லுதாசினிக்கத்தக்கதொன்றை 'நாவற்பழம்' என வழங்கும் குறிப்புமொழியே இங்கு எடுத்துக்கொண்டபொருளை முடித்தற்குத் திட்டாந்தமாகக் காட்டப்பட்ட பழமொழியாயிற்று. இப்பழமொழி "பெருவழி நாவற் கனியினு மெளியனிவனெனப் பேசுகின்றாயே" எனப் பெரியதிருமொழியுள்ளும் *வழங்கப்பட்டது.

139. பெரியாரைச் சார்ந்தார்மேற் பேதைமைகந் தாகச்
சிறியார் முரண்கொண் டொழுகல்—வெறியொலிக்
கோநா யினம்வெருஉம் வெற்ப புலம்புகிற்
றீநா யெடுப்புமா மெண்கு.

இ-ள், வலியாற்பெரியாரைச் சார்ந்தார்மேற் றமதறியாமையே பற்றாக வலியாற்சிறியார் மாறுகொண்டொழுகுதல், வெறியாட்டொலியை கோநாயினங்கள் வெருவாநின்ற வெற்பனே! எண்குறையுங் காட்டின்கட் டீயநாய் புக்கா லங்கு வாழு மெண்கினைத் தாக் கற்குநின்று மெழுப்புதலோ டொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, தம்மின்வலியாரோடு மாறுகொள்ளலாகா தென்கிறது. பெரியாரைச்சார்ந்தார் என்றது தாமே பெரியராயினரும், அவரைச் சார்ந்தொழுகுவாரு மென இருதிறத்தாரையும் அகப்படுத்திநின்றது. வலி—இடம், பொருள், ஏவல் முதலியவும், ஆற்றலு முடைமை. பேதைமை கந்தாக என்றது பிறிதொருசார்புமின்மையுணரநின்ற இகழ்ச்சிக்குறிப்பு. வெறியாட்டொலி—முருகன் ஆவேசமாக வேலன்

* பத்தாம்பத்து 9-ஆம் திருமொழி பாசுரம் ௫.

வெறியாடும் கூக்குரலொலி. ஓநாயினங்கள்—ஓநாய் செந்நாய் நரிமுதலிய துட்டமிருகங்கள். வெருவுதல்—சிங்கமுழக்கென் றஞ்சுதல். இது தெய்வமும் சிங்கமுதலிய கடுமானினங்களும் வாழ்தற்குரிய காடடர்ந்த தென அச்சச்சுவைதோன்ற வெற்பின்சிறப்புக்கூறி யாடேமுன்னிலை மொழியை விசேடித்தபடி. எண்கு—கரடி. எடுப்புமாமெண்கு என்றா ராயினும் எண்கெடுப்பாமென்பதே கருத்தாகக்கொள்க. ஒழுகல் எண் கெடுப்பாமெனக்கூட்டுக. காட்டிலிருந்த கரடியையெழுப்பிஆட்டுக்கிடை நா யடிபட்டதுபோலும், என்ப திதன் பழமொழி. இதன் விருத்தாந்தம் கரடி தன்வலியாலும், காடடர்த்தியுள்ள தன் னிடவலியாலும், தன்மெய் யின் மயிரடர்த்தியான துணைவலியாலும் சிறந்திருக்க, அதன்வலியறி யாது தன்னின் மெலிய கிடையாடுகளைச் சிதறவிடா தொருகளப்படுத் திய கிடைநாய் காட்டிடைப்புகுந்து அக்கரடியையும் யாடெனமதித்துத் தன்வழிப்படுப்பதாயெழுப்புவான்முயல அக்கரடி தன்மெய்யின் மயிரடர்த் தியுள் அந் நாய்க்கவ்வினைச் சிக்கவைத்து தன் வலிமிகுதியால் அந்நாயை யடித்துக் கொல்லுமென்பதாம். இது இங்கு நிட்டாந்தமாயிற்று. இதனாற் பெரியாரைச்சேர்ந்தார் தம் வலியாலும் தம் சார்பின்வலியாலும் துணை வலியாலும் தம்மின் மூரண்கொண்டொழுகும் சிறியாரை யிறந்துபடப் புரிவாராதலா லவரோடு மாறுகொள்ளலாகாதென்பது குறிப்பாயிற்று.

140. மரம்போல் வலிய மனத்தாரை முன்னின்
றிரந்தார் பெறுவ தொன்றில்லை—குரங்கூசல்
வள்ளியி னாடு மலைநாட வஃதன்றே
பள்ளியு ளையம் புகல்.

எ-து, மரம்போலே வலியதொரு மனத்தையுடையாரை முன் னே நின் றிரந்தார் அவராற்பெறுவ தொருபொருளுமில்லை; குரங்குகள் வள்ளிக்கொடி யின்கணிருந் தூசலாடு மலைநாடனே! அதுவன்றே அருந்தவரிருந்தேவாழும் பள்ளியு ளையம்புகுத லென்றவாறு.

(குறிப்பு) இது, வன்னெஞ்சர்பாற் சென் றொன் றிரவற்க வென் கின்றது. இரப்போரது பரிதாபங்கண் டிளகாதநெஞ்சென்பார் 'மரம் போல்வலியமன' மென்றார். "மரங்கள்போல்வலியநெஞ்சு" என்பது திரு மாலை.* இங்கு மரத்துக்கு வன்மையாவது எரிதழலின் பரிதாபங்கண்

* பாசுரம்-உஎ.

டிரும்பு மிளகியுருகுவதாயிருக்க மரஞ் சிறிதுமிளகாது வெந்து கரியாக மாறுவது. முன்னையின் றிரந்தார்பெறுவ தொருபொருளு மில்லை யென் பதற்கு அவர்காணுது காந்து வஞ்சித்துக்கொள்வார்க்கு எல்லாப்பொரு ளும் அவர்தாமேகொள்ளக் கொடுப்பர் என்பது குறிப்பு. 'குரங்கு ளூசல் வள்ளியினூடு' என்றது இன்பச்சுவைதோன்ற மலையைவிசேடித்தபடி. அது என்ற சுட்டு அறுவாதப்பொருளில் வந்தது. அன்றேயென்றது தெளிவுறுத்தி நின்றது. அருந்தவர்—அசகரவிருத்தியுடைய முனிவர். அசகரவிருத்தியாவது தா முணவுவேண்டி ஓரிடமும் செல்லாது தாமுறையுமிடத்தே பிறர்வலிதிற்கொணர்ந்து வாய்ப்பெய்யுமுண வினையுண் டுயிர்வாழ்தல். இருந்தேவாழும்பள்ளி என்றது வேறொரு விருத்தியாலும் பொருளீட்டலின்றி இருத்தன்மாத்திரத்துக்கு இடமா யிருக்கும் ஆச்சிரமம் என்றபடி. "சன்னசிமடத்திற் பிச்சைக்குப் போனதுபோலும்" என்ப திதன் பழமொழி. அருந்தவர் அருளுடைய ராயினும் பொருளுடையரன்மையால் அவர்பாற்சென் றிரந்தார்பெறுவ தொருபொருளுமில்லாதவாறுபோல வன்னெஞ்சர் பொருளுடையராயி னும் அருளுடையரன்மையால் அவர்பாற்சென் றிரந்தோரும் பெறுவ தொருபொருளுமில்லையெனப் பொருளோடுபொருத்தி யுரைத்துக் கொள்க. இதனால் இரப்போர் அருளும் பொருளு முடையாரைச் சென் றிரக்கவென்பது குறிப்பாயிற்று.

141. அற்றாக நோக்கி யறத்திற் கருளுடைமை
முற்ற வறிந்தார் முதலறிந்தார்—தெற்ற
முதல்விட் டஃதொழிந்தா ரோம்பா வொழுக்க
முயல்விட்டுக் காக்கை தினல்.

இ-ள். அறத்திற்குப் பண்பாவ தருளென் றத்தன்மைத்தாக வாராய்ந்து நிரம்பவறிந்தா ரறத்திற்குக் காரண மறிந் தறஞ்செய்தோராவர்; தெளியவறத் திற்குக் காரணமாகிய வருளைப் பிறரால் விட் டதனேடுகூடி யறத்தையொழிந் தாருடைய பாதுகாவாக் கொடைமுதலிய பிறவொழுக்கத்தைச் செய்தல் முயலை விட்டுக் காக்கையைத்தின்னுமதனேடொக்கு மென்றவாறு.

## மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1920 ௵ அக்டோபர்௴ த்திய வரவு செலவு கணக்கு.

| விவரம் | வரவு 1920 October | | | 1919 October | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section: | | | | | | |
| (1) நன்கொடை, மாதச்சந்தா வகையில் வரவு ... | 260 | ... | ... | | | |
| (2) M. R. C. C. Bankல் போட்டுள்ள தொகையின்பேரில் வட்டி வரவு ... | 781 | 6 | 6 | | | |
| (3) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 80 | 12 | 6 | | | |
| (4) Miscellaneous வரவ ... | ... | 11 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 1122 | 14 | ... | 348 | ... | ... |

| விவரம் | செலவு 1920 October | | | 1919 October | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section: | | | | | | |
| (1) Establishment:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல் | 136 | ... | ... | | | |
| (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 107 | ... | ... | | | |
| (c) மாணவர்கட்குப் போஷணைக்காகச் செல் ... | 111 | 8 | ... | | | |
| (d) Literary Section சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 65 | ... | ... | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையில் செல் ... | 15 | 5 | 2 | | | |
| (3) புத்தகசாலைக்கு ப்புத்தகம் வாங்கிய வகையில் செல் ... | 1 | 5 | ... | | | |

| | Rs. | A. | P. | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|
| II Editorial Section: | | | | | | |
| (1) 'செந்தமிழ்ப்' பத்திரிகைக்குச் சந்தா வரவு ... | 20 | 14 | ... | | | |
| (2) விளம்பரச் சார்ஜ் வரவு ... | 6 | ... | ... | | | |
| (3) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்ற வகையில் வரவு | 19 | 7 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 46 | 5 | ... | 47 | 14 | ... |
| III Press Section: | | | | | | |
| (a) Printing | | | | | | |
| (1) சங்கம் பவர்ப்பிரஸ்ஸில் நடந்த வேலைகளுக்கு அச்சுக்கூலி வரவு ... | 131 | 13 | ... | | | |
| (2) ஷை வேலைகட்காகக் காகிதக் கிரயம் வரவு ... | 50 | 13 | ... | | | |
| (3) Miscellaneous வரவு ... | ... | 4 | ... | | | |

| | Rs. | A. | P. | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|
| (4) சங்கக்கட்டட வகையாரிப்பேர் வகைத்தாராகச் செலவு ... | 441 | 8 | 3 | | | |
| (5) தபால், தந்தி வகையில் செல் ... | 11 | 1 | 9 | | | |
| (6) முனிசிபாலிட்டிக்கு வரி செலுத்தியது ... | 51 | ... | ... | | | |
| (7) புத்தகப்பிரசுர சம்பந்தமாக அச்சுக்கூலி வகையிற் செலவு ... | 1 | 8 | ... | | | |
| (8) சங்க சில்லறை வேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி வகையில் செலவு ... | 17 | 1 | ... | | | |
| (9) சங்கப் பரீக்ஷையில் பரிசு பெற்றவர்கட்குப் பரிசு பதக்கம் அளித்த வகையில் செலவு ... | 206 | 2 | ... | | | |
| (10) Miscellaneous செலவு | 17 | 6 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 1184 | 13 | 2 | 586 | 9 | 8 |
| II Editorial Section: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 30 | 5 | 4 | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (b) Binding | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீஸில் நடந்த வேலைகளுக்கு, பைண்டிங் சார்ஜ் வரவு ... | 60 | 15 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 243 | 13 | ... | 106 | 2 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) செந்தமிழ்ப் பத்திரிகை சம்பந்தமாகக் காகிதம் அச்சுக்கூலி வகையில் செலவு ... | 180 | 10 | ... | | | |
| (3) தபால், தந்தி வகையில் செலவு ... | 12 | 10 | 3 | | | |
| மொத்தம் ரூ ... | 223 | 9 | 7 | 82 | 13 | 9 |
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 139 | ... | 3 | | | |
| (2) அச்சாபீசிற்கு டைப்ஸ் வகையரா வாங்கியது ... | 86 | 6 | ... | | | |
| (3) அச்சாபீஸ் சீர்திருத்தச் சம்பந்தமாகச் செலவு ... | 21 | 3 | 6 | | | |
| (4) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 66 | 11 | 1 | | | |
| (5) பிரஸ் குத்தகைதாரிடமிருந்து ஆர்டர்தாருக்கு வாபஸ் செய்யும்படி ஆகஸ்மீத்தில் வரவுவந்த தொகையை ஆர்டர்தாருக்கு அனுப்பியது ... | 100 | ... | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 1413 | ... | ... | 502 | ... | ... |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத் தொகை ரூ. ... | 2130 | 3 | 7 | 1822 | 14 | 8 |
| ஆகமொத்தம் ரூ. ... | 3543 | 3 | 7 | 2324 | 14 | 3 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (b) Binding | | | | | | |
| 1) சிப்பந்திகட்குச் சம்பளச் செல் | 33 | 10 | 8 | | | |
| (2) Contingencies வாக்கியளைகயில் செலவு ... | 55 | 2 | 9 | | | |
| மொத்தம் ரூ | 502 | 2 | 3 | 299 | 1 | 7 |
| ஆக மொத்தம் செலவு ரூ. | 1910 | 9 | ... | 968 | 8 | 7 |
| மாத முடிவில் மீதியிருப்புத் தொகை ... | *1632 | 10 | 7 | 1356 | 5 | 8 |
| ஆகமொத்தம் ரூ. | 3543 | 3 | 7 | 2324 | 14 | 3 |

*By C. Pass Book 400-0-0
Advance for purchase of Press Materials at Madras 912-11-0
Cash on hand 319-15-7

*Audited and found correct.*

**V. S. RAMASWAMI,**

AUDITOR.

1—11—20.

**T. SUDARSANACHARI,**

*Manager.*

MADURA TAMIL SANGAM.

30—10—20.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1920-௵ நவம்பர்௴த்திய வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1920 November | | | வரவு 1919 November | | |
|---|---|---|---|---|---|---|
| **I General Section:** | | | | | | |
| (1) நன்கொடை,மாதச்சந்தா வகையில் வரவு ... | 870 | 8 | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு. | 31 | 10 | 6 | | | |
| (3) Miscellaneous வரவு ... | ... | 2 | ... | | | |
| மொத்தம் ... | 902 | 4 | 6 | 303 | 9 | ... |
| **II Editorial Section:** | | | | | | |
| (1) 'செந்தமிழ்'ப்பத்திரிகைக்குச் சந்தாவரவு ... | 2 | ... | .. | | | |
| (2) விளம்பர சார்ஜ் வரவு ... | 15 | ... | 6 | | | |

| விவரம் | செலவு 1920 November | | | செலவு 1919 November | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section: | | | | | | |
| (1) Establishment:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டு ஆபீஸ்சிப்பந்திகட்குச் சம்பளம் செல்... | 136 | ... | ... | | | |
| (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 89 | 9 | 3 | | | |
| (c) மாணவர்கட்குப் போஷணைக்காகச் செல் ... | 157 | 14 | 8 | | | |
| (d) Literary Section சிப்பந்திகட்குச்சம்பளம் செல் ... | 65 | ... | ... | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையிற்செல் ... | 11 | 1 | .. | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்ற வகையில் வரவு ... | 10 | 7 | ... | | | |
| மொத்தம் ... | 27 | 7 | 6 | 33 | 6 | ... |
| III Press Section: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்ஸில் நடந்த வேலைகளுக்கு அச்சுக் கூலி வரவு ... | 524 | 11 | ... | | | |
| (2) வெளிவேலைகட்காகக் காகிதக்கிரயம் வரவு ... | 377 | 2 | .. | | | |
| (3) Miscellaneous வரவு... | 2 | ... | ... | | | |
| (b) Binding: | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீஸில் நடந்த வேலைகளுக்கு பைண்டிங் சார்ஜ் வரவு... | 103 | 2 | ... | | | |
| மொத்தம் ... | 1006 | 15 | ... | 399 | 3 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) Furniture வாங்கிய வகையிற் செல் ... | 15 | 5 | ... | | | |
| (4) Furniture ரிப்பேர் வகையில் செல் ... | 1 | 4 | ... | | | |
| (5) சங்கக்கட்டட வகையரா ரிப்பேர் சம்பந்தமாகச் செலவு ... | 274 | 10 | ... | | | |
| (6) தபால், தந்திவகையில் செலவு ... | 6 | 11 | 9 | | | |
| (7) சங்க சில்லறை வேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலி வகையிற் செலவு ... | 82 | 2 | ... | | | |
| (8) Miscellaneous செலவு... | 8 | 12 | 6 | | | |
| மொத்தம் ... | 848 | 6 | 2 | 423 | 4 | 2 |
| II Editorial Section: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 35 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப் பத்திரிகைசம்பந்தமாக, வாங்கிய காகிதம் அச்சுக்கூலி வகையிற் செல் ... | 407 | 6 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) தபால், தந்தி வகையில் செல் ... | 10 | 12 | 3 | | | |
| மொத்தம் ... | 453 | 2 | 3 | 211 | 13 | 3 |
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 136 | 12 | 2 | | | |
| (2) Furniture வாங்கிய வகையிற் செலவு ... | 1 | ... | ... | | | |
| (3) ரிட்பேர்வகையில் செலவு | 2 | 12 | ... | | | |
| (4) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 46 | 5 | ... | | | |
| (5) Miscellaneous செலவு. | 20 | 8 | ... | | | |
| (b) Binding: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 32 | 9 | 4 | | | |
| (2) ரிப்பேர் வகையிற் செலவு | 6 | ... | ... | | | |

| | Rs. | A. | P. | Rs. | A. | P. | | Rs. | A. | P. | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | (3) Contingencies வகை [illegible] செலவு ... | 38 | 7 | ... | | | |
| | | | | | | | மொத்தம் ... | 736 | 5 | 6 | 75 | ... | ... |
| | | | | | | | ஆக மொத்தம் செலவு ரூ ... | 2037 | 13 | 11 | 710 | 1 | 5 |
| | | | | | | | மாதமுடிவில் மீதி இருப்புத் தொகை ... | *1531 | 7 | 8 | 1382 | 6 | 3 |
| | | | | | | | ஆகமொத்தம் ரூ. ... | 3569 | 5 | 7 | 2092 | 7 | 8 |
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 1936 | 11 | ... | 736 | 2 | ... | | | | | | | |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ... | 1632 | 10 | 7 | 1356 | 5 | 8 | | | | | | | |
| ஆகமொத்தம் ரூ ... | 3569 | 5 | 7 | 2092 | 7 | 8 | | | | | | | |

*By C Pass Book 25—0—0
Advance for purchase of Press Materials at Madras 812–11—0
Cash on hand 698—12—8

*Audited and found correct,*

**V. S. RAMASWAMI,**

AUDITOR,
15—3—21.

**T. SUDARSANACHARI,**

*Manager,*

MADURA TAMIL SANGAM.
24—12—20.